


* மதுரமான மங்கள இசை

# கல்கி பொன்விழா
# தமிழகத்தின் திருவிழா!

“உங்கள் வீட்டுத் திருவிழா” என்று சொன்னோம். “ஆமாம், இது எங்கள் வீட்டுக் கல்யாணம்தான்” என்று நிரூபித்துக் காட்டி விட்டார்கள் வாசகர்கள்.

“அடேயப்பா! காமராஜர் அரங்கம் இப்படி ஒரு கூட்டத்தை இதுவரை கண்ட



* இஸ்மாயில் : பரிசு வழங்கினார்

தில்லை; இப்படிப்பட்ட கல்யாண குணங்களோடு கூடிய ஒரு சபையைப் பெற்றதில்லை” என்றும் விழாவின் பல்வேறு சிறப்புகள் பற்றியும் விழா முடிந்து ஐந்தாறு நாட்களுக்குப் பிறகு இன்னும் சென்னை நகரப் பெருமக்கள் சொல்லிச் சொல்லி மகிழ்ந்து போகிறார்கள்.

பண்பாடு என்பது புரிந்து கொள்ளப்பட்டால் மெய்யான சோஷலிசம் தோன்றிவிடும் என்பதை உணர்த்துவதே போல, சபையில் சராசரி வாசகருடன் வி.ஐ.பிக்கள் இழைந்தார்கள். இலக்கியத்துடன் இசை கைகுலுக்கியது. அதிகார

* இறை வணக்கம் : சுதா ரகுநாதன்





● ம.பொ.சி.க்குப் பொன்னாடை

வர்க்கத்துடன் ஆடல் கலைஞர்களும் சேர்ந்து ஆனந்தப்பட்டார்கள்.

தமிழின், தமிழ்க் கலைகளின் மறுமலர்ச்சிக்கும், தார்மிக அரசியலுக்கும், சமுதாய நோக்கிலும் பல்வேறு விதங்களில் கல்கி ஆற்றியுள்ள பணிகளையெல்லாம் மறக்க முடியாதவர்களாக நன்றியுணர்வோடு நெகிழ்ந்து, கண்கள் பனிக்க நிறைந்திருந்தார்கள்.

தமிழகத்தின் திருவிழாவாகவே நடத்திக் கொடுத்து விட்டார்கள்.



பி. கே. மதுரை குழுவினரின் மதுரமான நாதஸ்வர இன்னிசையைத் தொடர்ந்து, சுதா ரகுநாதன் விநாயகக் கடவுளை வாழ்த்தி விட்டுப் ''பொன் மயில் ஏறி வருவான்'' என்ற கல்கியவர்களின் பாடலை எடுத்ததும் காமராஜ் அரங்கம் களைகட்டி விட்டது. பொன் விழாவுக்குப் பொருத்தமாக இந்தப் பாடல் அமைந்திருப்பதைக் கேட்டுப் பூரித்தோம். ''கன்னலின் இனிய தண் தமிழ் அளிக்கும்'' முருகப் பெருமானை வணங்கி விட்டு இந்த விழா தொடங்கியது மிகப் பொருத்தமாக இருந்தது.

விழாவில் ஒரே தகதகப்புத்தான். மினுமினுப்



● மகண்டலமை நீதிபதியும் முன்னாள் ஆசிரியர் மீ.ப. சோமுவும்



● வரவேற்புரை : சேர்மன் வைத்தியநாதன்



● எம். வி. அருணாசலம் : ஆரம்பநாட்களை நினைவுகூர்ந்தார்

பூத் தான். மேடையே பொன் மழை பொழிந்தது போல் அலங்கரிக்கப்பட்டிருந்தது. பொன் வண்ண விநாயகர் கல்லியைப் பாடித் துக் கொண்டே வேகமாக நடந்தார்.

பிறகு ஒரே பொன்னாடைகள் மயம்தான். விழா மேடையில் இருந்த அத்தனை பேரும் பொன்னாடையில்



● சிவசங்கரி : பொன்னாடையில் மின்னுகிறார் போல...

பளபளத்தார்கள். பொன் விழாவுக்கென்றே தயாரிக்கப்பட்டு வெளியிடப்பட்ட பொன் விழா மலரும் பொன் தகட்டில் சுற்றப்பட்டு மேடைக்கு வந்தது!

அன்றைய தினம் சொற்பொழிவுகள் ஒவ்வொன்றும் பொற்சங்கிலியில் கோக்கப்பட்ட பல வண்ண மணிகளைப் போலப் பளபளவென்று மின்ன என்றால் கவியரசு வைரமுத்துவின் இணைப்புரையோ அவற்றை வைர ஆரமாகவே ஜொலிக்கச் செய்தது.



● சிறப்பு அஞ்சல் உறையின் கறுகறுப்பான விற்பனை...

● திருவாரூர் கல்கி ஏஜெண்ட் பேசுகிறார்...





''இது உங்கள் வீட்டுத் திரு விழா மட்டுமல்ல. இது ராஜாஜியின் விழா, இது டி.கே.சி. விழா, இது அமரர் கல்கி விழா, வள்ளல் சதாசிவம் அவர்களின் தொண்ணூறாவது பிறந்த தின விழா. அவரது துணைவியார் எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் தொண்டுள்ளத்துக்குத் திருவிழா'' என்று தமது வரவேற்புரையைத் தொடங்கி ராஜேந்திரன் அவர்கள் சபையோர் உள்ளங்களை நெகிழச் செய்தார். ''தனித் தனியே அவர்கள் இயங்கிச் சிறப்புற்றார்கள். இந்த ஐவரும் ஒன்று

* சிகரம் வைத்தது போல் நாடகம்



* தொண்டுள்ளத்துக்கு ஒரு விழா



* வரவேற்பு



* செம்மங்குடி : வெள்ளி விழாவிலும் பொன் விழாவிலும்



★ கூட்டத்தின் ஒரு பகுதி

சேர்ந்து ஒத்துழைத்த போது நாடே உயர்ந்தது. இந்த ஐந்து பேருடைய காரியங்கள் ஒவ்வொன்றிலும் தன்னலம் என்பது பின் தள்ளப் பட்டு தேசநலம் என்பது ஒன்றே குறிக்கோளாக இருந்தது'' என்பதை எடுத்துச் சொன்னார்.

கல்கியவர்கள் கல்கி பத்திரிகை முதல் இதழில், கல்கி பத்திரிகையின் குறிக்கோள் ''தேசநலன்! தேசநலன்! தேசநலன்'' என்று வலியுறுத்தி மும்முறை சொல்லியிருக்கிறார் என்பதை நினைவூட்டினார். கல்கி பத்திரிகைக்கு இன்னும் அதுதான் வழி காட்டும் தாரகமந்திரமாக இருக்கிறது என்று குறிப்பிட்டார். அந்தத் தேசநலன் என்ற பெருநோக்குடன் நடக்கும் பெருவிழா இந்தப் பொன் விழா என்று கூறினார்.

''அமரர் கல்கியவர்களின் எழுத்தாற்றலும், சதாசிவம் அவர்களின் நிர்வாக ஆற்றலும் சேர்ந்ததால் இந்தக் கல்கி நிறுவனம் மேன்மை அடைந்தது. அவர்கள் போட்ட அஸ்திவாரத்தின் மீதுதான் இன்னும் கல்கி நடந்து வருகிறது'' என்று உணர்ச்சியுடன் கூறினார் ஆசிரியர் ராஜேந்திரன்.

''பத்திரிகை நடத்துவது மிகக் கஷ்டம். அதிலும் நன்றாகவும் யோக்யமாகவும், தெய்வசிந்தனையுடனும் நடத்துவது பெரிய சாதனை. நல்ல தமிழ்ப் பத்திரிகைகளை வெற்றிகரமாக நடத்துவது பெரிய தேசப் பணி. பத்திரிகையில் பதிவாகும் ஒவ்வொரு எழுத்தும் பெரிய பொறுப்பு. அதை உணர்ந்து விஷயங்கள் எழுதி, கல்கிக்கு உதவிய அனைவருக்கும் என் பாராட்டு. மேலும் இப்படியே பல்லாண்டு நடந்து வருவதற்கு என் ஆசிகள்!'' இது ராஜாஜி அவர்கள் கல்கியில் இருபதாவது ஆண்டு மலருக்கு வழங்கிய ஆசிச் செய்தி.

''இன்றைக்கும் அந்த நோக்கிலேயே தான் தொடர்ந்து நடத்திக் கொண்டிருக்கிறோம். பொறுப்புணர்வை நினைவூட்டுகின்ற அந்த ஆசிகளை கல்கி பத்திரிகையுடன் ஏதேனும் ஒருவிதத்தில் தொடர்பு கொண்டுள்ள ஒவ்வொருவருக்கும் உரியதாக இங்கே சமர்ப்பிக்கிறேன்'' என்று கூறினார்.

''இன்றைய தினம் இலக்கிய ஆர்வலர்களுக்குக் கல்கி ஒரு சங்கப் பலகையாகத் திகழ்கிறது என்றால் அது ரசிகமணி டி.கே.சி. வடிவமைத்துத் தந்த பொற் பலகை என்பதே காரணம்'' என்றார் ராஜேந்திரன்.

பிறகு, ''கல்கி அவதாரம் வரை இந்தக் கல்கி நடக்க வேண்டும்'' என்று காஞ்சி முனிவர் அருளாசி வழங்கியதை மெய் சிலிர்ப்புடன் நினைவுகூர்ந்தார். ''என்ன கல்கி காரு!'' என்று அன்புடன் அழைத்து, பகவான் சத்தியசாயிபாபா பேட்டி கொடுத்ததை மனநெகிழ்ச்சியோடு கூறினார்.

இந்தப் பெரியோர்களையெல்லாம் உள்ளத்தில் நினைத்து அஞ்சலி செய்து வரவேற்ற பிறகு விழாவில் பங்கேற்க வந்திருந்தவர்களையெல்லாம் வரவேற்றார் ஆசிரியர். பொன் விழாப் போட்டியில் பரிசு பெற்றவர்கள் உண்மையாகவே மகா பாக்கியசாலிகள். எப்படிப்பட்ட சபை அவர்களுக்கு வாய்த்திருந்தது! தமிழகத்தின் முன்னணி எழுத்தாளர்களும், கலைஞர்களும், இசை விற்பன்னர்களும், ரசிகப் பெருமக்களும், வாசகப் பெருமக்களும், கல்கி பத்திரிகையின் வெற்றிக்கு அயராமல் பாடுபடும் கல்கி ஏஜெண்டுகளும், கல்கியின் எழுத்துக்களை அணுஅணுவாக ஆராய்ந்தவர்களும், தமிழன்பர்களும், சொல்லாற்றல் மிக்க பேச்சாளர்களும் குழுமியிருந்த அரியதொரு சபையல்லவா அவர்களுக்கு வாய்த்திருந்தது. அதுவும் கம்பராமாயணத்தை மாந்தி மாந்தி மகிழும் நீதிபதி எம். எம். இஸ்மாயீல் அவர்களின் கரங்களில் பொன்னாடையும் பரிசும் பெறக் கொடுத்து வைத்திருந்தது.

நீதிபதி இஸ்மாயீல் அவர்கள் தமது தலைமை உரையில் 'ராஜாஜி அவர்கள் அளந்து, நிறுத்து, நிதானத்தோடு என்றும் நிலைத்து நிற்கக்கூடிய வகையிலே பேசிய

கருத்தாழமிக்க சொற்களையெல்லாம் யாராவது ஆராய்ந்து தொகுத்து, குறிப்பிட்ட தலைப்புக்களிலே பதிப்பித்து வெளியிடுவார்களேயானால் அது இந்த நாட்டில் என்றும் அழியாத வேதமாக விளங்கும்' என்று குறிப்பிட்டார். அத்தகைய மகானின் ஆசி பெற்ற பத்திரிகை இது. ராஜாஜி அவர்களுடைய பெயரும் தொண்டும் பேச்சும் எழுத்தும் எத்தனை ஆண்டுகள் இந்த நாட்டு மக்களின் உள்ளத்திலே நிலைத்திருக்குமோ வாழுமோ அதற்கு மேலும் ''கல்கி'' வளர்ந்து கொண்டே செல்லும் என்று வாழ்த்தினார் நீதிபதி. மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்களிடம் கல்கிக்கு இருந்த மரியாதையையும் அன்பையும் எடுத்துக் கூறினார் நீதிபதி. இலக்கிய உலகத்திலே இடம் பெற்றிருக்கின்ற அத்தனை எழுத்தாளர்களின் உள்ளங்களும் துள்ளிக் குதிக்கக்கூடிய விழா இது'' என்றார்.

அவருடைய தலைமை உரைக்குப் பின் பொன் விழாப் போட்டிகளில் பரிசு பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. நடுவராக இருந்து சிறந்த நாவல்கள், கதைகள் முதலியவற்றைத் தேர்ந்தெடுத்தவர்களும் கௌரவிக்கப்பட்டார்கள்.

நீதிபதி இஸ்மாயீல் அவர்கள், மிகவும் நிதானமாக, கவனத்துடன், பரிசு பெற மேடைக்கு வந்த எழுத்தாளர்களையும் நடுவர்களையும் போட்டோவும் வீடியோவும் எடுத்துக் கொண்டிருந்த போகா குழுவினரைப் பார்த்துத் திரும்பி நிற்கச் செய்தது ரொம்ப சுவாரஸ்யமாக இருந்தது. அத்தனை பேரும் போட்டோ எடுக்கப்பட வேண்டும்; இது அவர்களுக்கு மிக முக்கியமான நிகழ்ச்சி என்று பரிவுடன் அவர் செய்தது இஸ்மாயீல் அவர்களின் பண்பாட்டையும் நல்லிதயத்தையும் உணர்த்தியது.

அஞ்சல் துறை தலைவர் (Chief Post Master General - Tamil Nadu Circle) டி. பார்த்தசாரதி அமரர் கல்கியின் படம் அச்சான அஞ்சல் உறையை அளிக்க, தொழிலதிபர் சுரேஷ் கிருஷ்ணா அதைப் பெற்றுக் கொண்டார். கல்கியவர்கள் பெரிய கூட்டங்களுக்கெல்லாம் இளைஞராக இருந்த போது சென்று நகைச்சுவை ததும்ப அவர் பேசியதைக் கேட்டு ரசித்ததை நினைவுகூர்ந்தார் பார்த்தசாரதி. ''அமரர் கல்கிக்கு அஞ்சலியாக இன்று இந்த அஞ்சல் உறையைச் சிறப்பு முத்திரையோடு வெளியிடுகிறோம்'' என்று கூறினார்.

அஞ்சல் உறைமீது டாக்டர் ராதா கிருஷ்ணன், வீரர் சத்தியமூர்த்தி, நாமக்கல் கவிஞர், ருக்மிணி தேவி அருண்டேல் முதலியவர்களுடைய படம் உள்ள பொருத்தமான தபால்தலைகளை ஒட்டி முத்திரை குத்தி அன்றைய தினம் விற்பனை செய்தார்கள். சிறப்பு முத்திரையிலே கல்கி விநாயகர் அருள்பாலித்தார். உடனே பலர் அந்த உறைகளை வாங்கி அங்கேயே உட்கார்ந்து கடிதம் எழுதி இதற்காகவே அங்கு வைக்கப்பட்டிருந்த விசேஷ அஞ்சல் பெட்டியில் சேர்த்தார்கள். இதற்கான ஏற்பாட்டை அழகாகச் செய்திருந்தனர் அஞ்சல் துறையினர்.

அஞ்சல் உறையைப் பெற்றுக் கொண்ட சென்னை மாநகர் ஷெரீப் சுரேஷ் கிருஷ்ணா அரியதொரு சொற்பொழிவாற்றினார். பள்ளிப் பருவத்தில் தம் தாயார் அம்புஜம் கிருஷ்ணா ஒருநாள், ''என்னவெல்லாமோ படிக்கிறாயே. சிவகாமியின் சபதம் படி'' என்று கூறிப் புத்தகத்தைக் கொடுத்ததையும் அன்று முதல் அத்தியாயம் படித்த போது மனத்தில் உண்டான உணர்வுகளை வருணிக்க வார்த்தைகள் தெரியாமல் திகைப்பதாகவும் சொல்லி விட்டு,

''அதை இலக்கியக் காதல் என்றுதான் சொல்ல வேண்டும். கல்கி எழுதிய முறையில் காதல், அவர் தேர்ந்தெடுத்த சொற்களில் காதல், அவருடைய கற்பனை அருவியில் காதல். அவர் கதை சொல்லும் திறனில் ஒரு காதல்... இரவு நேரத்தில் தூக்கம் வந்தால் கூடப் புத்தகத்தைக் கீழே வைக்க மனம் வராமல் உட்கார்ந்திருப்பேன். காலை எழுந்த உடனே புத்தகத்தை எடுத்துப் படிக்க வேண்டும் என்று ஆவல் தோன்றும். அதிலுள்ள கதாபாத்திரங்கள் மாமல்லர், பரஞ்சோதி, ஆயனர் எல்லாரும் என்னுடன் சேர்ந்து உணவருந்தியிருக்கிறார்கள். கிரிக்கெட் மாட்ச் பார்த்திருக்கிறார்கள். விளையாடியிருக்கிறார்கள். கேளிக்கைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். சிறு வயதில் நல்ல கருத்துக்களை அறிய வேண்டிய பருவத்தில், இந்த மாதிரி ஒரு இலக்கியக் காதலை ஏற்படுத்திக் கொடுத்தவர் கல்கிதான். இந்தக்

● தேசத்துக்குத் தலைமை கொண்டவரே திருவிழாவுக்குத் தலைமை கொள்ளுங்கள்.





★அன்று நிழல் விளக்கு: இன்று நிஜ விளக்கு

காதலுக்கு நான் நன்றி கூற விரும்புகிறேன்'' என்று இளமைக்கால நினைவுகளில் மூழ்கிப் பேசினார் சுரேஷ் கிருஷ்ணா. ''கல்கி பத்திரிகை மகத்தான தொண்டு செய்திருக்கிறது. மகத்தான மனிதர்களைப் பார்த்திருக்கிறது. பத்திரிகை வருங்கால இளைஞர்களுக்கும் இலக்கிய எழுத்தாளர்களுக்கும் சமுதாயத்துக்கும் மேலும் மேலும் தொண்டு செய்ய வேண்டும்'' என்று வாழ்த்தினார்.

**தொ**டக்க காலத்திலிருந்தே கல்கி பத்திரிகையின் நோக்கம் தேசநலன்தான் என்பதற்கு ஏற்ப விழாவில் நடந்த பட்டிமன்றமும் அமைந்திருந்தது. நாட்டின் எதிர்காலம் இருள் மயமே என்று ஒரு அணியினரும் ஒளிமயமே என்று இன்னொரு அணியினரும் வாதம் செய்தார்கள். பாரத நாட்டின் எதிர்காலம் ஒளிமயமே என்று தீர்ப்புக் கூறி கவலையால் இருண்டிருக்கும் நமது உள்ளங்களில் ஒளிவிளக்கேற்றி வைத்தார் சாலமன் பாப்பையா. பட்டிமன்றம் வெகு சுவையாக விறுவிறுப்பாக நடந்தது. பேசியவர்கள் ஆணித்தரமான வாதங்களைக் கூறினார்கள். (இது பற்றிய முழு விவரங்களை அடுத்த இதழில் வாசகர்கள் படித்து மகிழலாம்.)

பட்டிமன்றம் முடிய பிற்பகல் இரண்டு மணிக்கு மேலாகி விட்டது என்றாலும் செவிக்கு உணவு இல்லாத போது சிறிது அல்ல, வயிற்றுக்கு விருந்தே அளிக்கப்பட்டது. சொற்சுவையுடன் போட்டி போட்டுக் கொண்டு அறுசுவையான உணவு பரிமாறினார் சமையல் கலைஞர் தஞ்சாவூர் ஆனந்தா லாட்ஜ் கிட்டப்பா.

**மா**லை நிகழ்ச்சிகளைத் திருமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி குத்துவிளக்கு ஏற்றித் தொடங்கி வைத்தார். மணி கிருஷ்ணசாமி, இறைவணக்கம் பாடியபின், கல்கி அவர்கள் இயற்றிய செங்கனி வாயில் என்ற பாடலைப் பாடினார்.

நிகழ்ச்சிகளைக் கோர்வைப்படுத்திய கவிஞர் வைரமுத்து, கல்கியைத் தாங்கும் தூண்களில் ஒருவரான திரு. வி. வைத்தியநாதன் அவர்களை வரவேற்புரை நிகழ்த்த வரவேற்றார்.

'மழையை வரவேற்கிறது பூமி
நதியை வரவேற்கிறது ஆழி
நாளையை வரவேற்கிறது இன்று
வந்தோரை வரவேற்கிறார்
வைத்தியநாதன்'

என்று கவிதை நயத்துடன் அவர் நிகழ்ச்சியை ஆரம்பித்த பாங்கு இருக்கிறதே... அதைக் 'கல்கி'யும் ரசிகமணியும் இருந்து, 'பேஷ்' சொல்லியும் 'பலே' போட்டும் ரசிக்கவில்லையே என்ற ஆதங்கம் ஏற்பட்டது நமக்கு.

''இன்று கல்கி பத்திரிகையின் சரித்திரத்தில் ஒரு பொன்னேடு திறக்கிறது. ஒரு பத்திரிகையின் வாழ்க்கையில் ஐம்பதாண்டுகள் என்பது ஒரு சாதாரணமான விஷயமல்ல'' என்று தொடங்கி அனைவரையும் வரவேற்றார்.

''ஜனாதிபதிகளுக்குள் ஒரு மாணிக்கமாகத் திகழ்ந்த மாண்புமிகு. ஆர். வி. அவர்கள் தலைமை தாங்குவது நாங்கள் பெற்ற பெரும் பேறு'' என்று கூறிய வைத்தியநாதன், ஆர். வி. தம்முடைய வாழ்க்கை வரலாற்றைக் கல்கியில் எழுத வேண்டும் என்ற கோரிக்கையையும் அவர் முன் வைத்தார். அது இந்தியாவின் வரலாறாகவே அமையும் என்று அவர் கூறியதைக் கைதட்டி ஆமோதித்தார்கள் அவையோர்.

''ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் தமிழகத்தின் அதிர்ஷ்டத்தினால் ஐந்து பெரியோர் ஒன்று சேர்ந்தனர். ஒரு கல்கியை உருவாக்க எங்கள் ஒப்பற்ற திரு. சதாசிவம், இசையரசி என்று நேருஜியினால் வர்ணிக்கப்பட்ட எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள், எழுத்துலகத்தில் ஒரு சகாப்தத்தையே உருவாக்கிய கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள், ரசிகமணி டி.கே.சி. அவர்கள், இவர்கள் நால்வருக்கும் நல்லாசானாய் விளங்கிய ராஜாஜி அவர்கள். இவர்கள் பஞ்ச நதிகள் போல ஒன்று சேர்ந்தார்கள். கல்கியை உருவாக்கினார்கள். தமிழ் மொழி வளர்ச்சி,

தமிழ்நாட்டின் வளர்ச்சி, தமிழ்க் கலைகளின் மறுமலர்ச்சி, இவைகளோடு நமது பாரதப் பொன்னாட்டின் ஒருமைப்பாட்டைப் பேணிக்காப்பது, இவையே இவர்களுடைய குறிக்கோள். இவற்றையே அமரர் கல்கி காட்டிய வழியில், இப்போது திரு. சதாசிவம் காட்டி வருகின்ற வழியில் நாங்கள் நிறைவேற்றிப் பணிசெய்து வருகிறோம்.

''இந்த வாரம் கல்கி என்ன சொல்கிறது என்று ஆவலுடன் எதிர்பார்க்கும் பல லட்சக்கணக்கானவர்கள் எங்கள் கல்கி குடும்பத்தினர். இவர்கள் உலகம் முழுவதும் உள்ளார்கள். இந்தக் குடும்பத்தின் அங்கத்தினர்களாகவே பெருமளவில் எங்கள் விற்பனை ஏஜெண்டுகள் இங்கு வந்திருக்கிறார்கள். கல்கி குடும்பம் தழைக்க, வாழ்வாங்கு வாழ கல்கியின் காவல் தெய்வமான விநாயகப் பெருமானை வேண்டி இந்தப் புனித தினத்தில் உங்கள் அனைவரையும் வருக வருக என்று வரவேற்கிறேன். எய்தற்கரியதையெல்லாம் கல்கி பெற்றிருக்கிறது. இனிவரும் ஆண்டுகளில் செய்தற்கரியதையெல்லாம் செய்வோம்'' என்று உறுதி கூறி அனைவரையும் வரவேற்றார் வைத்தியநாதன்.

**கா**ஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள், திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள், பாரதப் பிரதமர் மாண்புமிகு பி. வி. நரசிம்மராவ், தமிழக ஆளுனர் மேதகு பீஷ்மநாராயண் சிங், மத்திய தகவல் ஒலிபரப்புத் துறை அமைச்சர் மாண்புமிகு அஜீத்குமார் பாஞ்சா, கலைஞர் கருணாநிதி ஆகிய பெரியோர்கள் அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்திகளைப் படித்தார் கல்கி ஆசிரியர்.

''பட்டுக் கோட்டையில்
பிறந்து
பாரதக் கோட்டையை
ஆண்டு - மீண்டும்
பொதிகைக்கு
வந்திருக்கும்
தமிழ்நாட்டுத் தென்றலே
நான்கு தலைமுறை
பார்த்தவர்கள் நீங்கள்
அது கூட விந்தையில்லை
நான்கு பிரதமர்
பார்த்தவர் நீங்கள்

என்று வைரமுத்து ஆர். வி. அவர்களைப் பார்த்துக் கவிதை வடித்த போது சபையே கலகலத்துப் போயிற்று.

தேசத்துக்கே தலைமை கொண்டவரே
- இந்தத்
திருவிழாவுக்குத் தலைமை
கொள்ளுங்கள்
நாட்டு மக்களுக்கு
உரைதந்தவரே உங்கள்
வீட்டு மக்களுக்கு உரை தாருங்கள்''

என்று நயம்பட தலைமை உரையாற்ற அழைத்தார்.

ஆர். வி. அவர்கள் தம் உரையைத் தமிழில் தொடங்கியதுமே சபையில் மகிழ்ச்சி நிலவியது. எல்லாருடைய முகங்களும் மலர்ந்தன. ''இதுவரை நான் சர்ச்சைகளைத் தவிர்ப்பதற்காக எழுதித்தான் படித்து வந்தேன். இப்போது குடியரசுத் தலைவர் பதவியிலிருந்து விடுதலை பெற்று விட்டதால் மனதில் இருப்பதைப் பேச வந்திருக்கிறேன்'' என்று கூறி அவையில் கலகலப்பு உண்டாக்கினார்.

அன்று ஆர். வி. அவர்களுடைய தலைமை உரை பத்திரிகைத் தொழிலில் உள்ளவர்களுக்கெல்லாம் பொதுவானது. கல்கியின் பொன் விழாவில் எல்லாப் பத்திரிகையாளர்களுக்கும் பொதுவான, அவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகளை அவர் கூறியது பொன்னேட்டில் எழுதப்பட வேண்டியவை.

''ஐம்பது ஆண்டுகளுக்கு முன் கல்கியவர்கள் ராஜாஜி கூறிய கருத்துக்களைத் தெளிவாக, எளிய நடையில், மக்கள் புரிந்து

● திருமதி ஆர். வி.க்கு வரவேற்பு...



கொள்ளும் வகையில் எடுத்துக் கூறியதன் பயனாகப் பலர் 'ராஜாஜியின் கருத்து என்ன' என்று தெரிந்து கொள்வதற்காகவே கல்கியைப் படித்தார்கள். பதவியில் இருப்பவர்களையே சிலர் வணங்குவார்கள். பதவியில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஒருவருடைய ஆழ்ந்த கருத்துக்களுக்காகச் சிலர் மதிப்பு வைப்பார்கள். அந்த நிலையைச் சேர்ந்தவர் கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள்'' என்று கல்கியவர்களைப் பாராட்டி விட்டுப் பதவியில் இல்லாத தம்மை அழைத்துத் தலைமைதாங்கச் செய்தது வியப்பளித்தது என்றார். கல்கியின் புதல்வர் ராஜேந்திரன் சிறப்பாக இந்தப் பத்திரிகையைக் கல்கியின் வழியிலேயே நடத்தி வருவது மட்டுமல்லாமல் தம் சொந்தப் பொறுப்பிலும் இவ்வளவு உன்னத லட்சியங்களை வைத்துக் கொண்டிருக்கிறார் என்று பாராட்டினார்.

''கல்கி, பிறர் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்பதற்காகத் தம் கருத்துக்களை மாற்றிக் கொள்ள மாட்டார். அந்த நிலை பத்திரிகைகளுக்கு ரொம்ப அவசியம்.




◆ திருச்சி மாவட்டம் பெரம்பலூரிலுள்ள ஒரு ஃபோட்டோ ஸ்டுடியோவின் பெயர் 'இதுதான்டா ஃபோட்டோ'

நேரில் பார்த்து எழுதி அனுப்பியவர் : எம். இராஜேந்திரன்

மக்கள் ஆதரவு இருக்கின்ற கருத்துக்களுக்கே அதிக முக்கியத்துவம் கொடுப்போமானால் பல சமயங்களில் உண்மை வெளிவராது போகும். பத்திரிகை தர்மம் உண்மையை எடுத்துச் சொல்ல வேண்டும் என்பதுதான். விற்பனை குறைந்து வருகிறது என்பதற்காகத் தங்கள் கருத்துக்களை மாற்றி எழுதுபவர்கள் பத்திரிகைத் தொழிலுக்கே துரோகம் செய்கிறார்கள் என்று சொல்ல விரும்புகிறேன்.

''கல்கியவர்கள் புதிய முறையிலே எழுத ஆரம்பித்தபடியால்தான் தமிழ் ஒரு ஜீவனுள்ள மொழியாக விளங்குகிறது. உலகத்திலுள்ள மொழிகளில் பழைமையான மொழிகளான க்ரீக், ஹீப்ரு, ஸம்ஸ்கிருதம், தமிழ், இவற்றில் தமிழ் ஒன்றுதான் இன்னும் உரை நடைப்பேச்சு மொழியாக இருக்கிறது. கல்கியும் அவரைப் பின்பற்றி எழுதிய பற்பல எழுத்தாளர்களும் தமிழ் மொழியை ஒரு உயிருள்ள மொழியாகச் செய்தார்கள். திரு.வி.க. அவர்கள்தான் இதற்கு முன்னோடியாக இருந்தார் என்று ஆர். வி. அவர்கள் கூறியதைச் சபையினர் ஆமோதித்தார்கள்.

அவருடைய தலைமை உரையை அடுத்து கல்கியவர்களின் வாழ்க்கைத் துணைவியார் ருக்மிணி அம்மாளுக்குத் திருமதி எம். எஸ். பொன்னாடை போர்த்திய போது அவையோரின் கண்கள் பனித்தன.

கல்கி பொன் விழா மலர் மொட்டவிழ்ந்தது. ஜி. கே. சுந்தரம் அவர்கள் தம் தொழிற்கரத்தால் மலரை இந்தியன் பாங்க் அதிபர் எம். கோபாலகிருஷ்ணன் அவர்களிடம் எடுத்துக் கொடுத்தார். இருவருமே 'கல்கி' பத்திரிகையின் சிறப்பான தொண்டுகளைப் பாராட்டிப் பேசினார்கள். அன்று போலவே கல்கி இன்றும் எல்லாரும் படிக்கக் கூடிய குடும்பப் பத்திரிகையாக விளங்குவதைப் பாராட்டினார் எம். கோபாலகிருஷ்ணன். கல்கி பத்திரிகை ஐம்பது ஆண்டு காலமாகக் குற்றம் சொல்ல முடியாத வகையில் பணி செய்து வந்திருப்பதை எடுத்துக் கூறிய, ஜி. கே. சுந்தரம், நீண்ட காலம் சதாசிவம் அவர்களே பத்திரிகையைத் திறம்பட நடத்தியதையும் கூறிப் பாராட்டினார். உலகத் தலைவர்கள் எல்லாம் இந்தியாவின் உண்மையான நிலை என்னவென்று தெரிந்து கொள்ள ராஜாஜியை நாடி வந்ததையும் அவர்களையெல்லாம் திரு. சதாசிவம் எம். எஸ். இருவரும் உபசரித்ததையும் எடுத்துச் சொன்னார்.

தொழிலதிபர் எம். வி. அருணாசலம், கல்கி ஆரம்பிப்பதற்கு எம். எஸ். அவர்கள் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் சாவித்திரி படத்தில் நடித்து அதில் பெற்ற தொகையை மூலதனமாக அளித்துக் கல்கியைத் தொடங்கி வைத்ததை நினைவுகூர்ந்தார். அன்று உருவகமாக விளக்கேற்றி வைத்தார். இன்று உண்மையாகவே விளக்கேற்றி வைத்தார். எவ்வாறு மூத்த பரம்பரை இந்தப் பத்திரிகையை ஆபாசமில்லாமல் அர்த்தமுள்ளதாகவும் அழகாகவும் நடத்தி வந்தார்களோ அதே போல் இளைய தலைமுறையைச் சேர்ந்த ராஜேந்திரனும் நன்றாக நடத்தி வருகிறார். தமிழ்த் தாய்க்கு நீண்ட காலம் கல்கி தொண்டு செய்து வரவேண்டும்'' என்று வாழ்த்தினார்.

*அன்று எம். எஸ். ஏற்றினார்கள்*
*திரைவிளக்கு*
*இன்று ஏற்றினார்கள் திஜவிளக்கு*

என்று அதைக் கவிதையாக வடித்தார் வைரமுத்து.

கவிஞர் வைரமுத்து குறிப்பிட்டது போல செம்மங்குடி ஸ்ரீநிவாச அய்யர் அவர்கள் உரைநடையில் சுருக்கமாக ஆலாபனை செய்தார். கல்கி பத்திரிகை தொடங்கிய போது கல்கியவர்கள் தமக்குக் கடிதம் எழுதியதையும் "உங்கள் எழுத்து எங்கே இருந்தாலும் அமோகமாக இருக்கும்" என்று தாம் வாழ்த்தியதையும் கூறினார். கல்கியின் வெள்ளி விழாவிலும் வாழ்த்திப் பொன் விழாவிலும் வாழ்த்துக் கூறிய செம்மங்குடி, எல்லாப் பத்திரிகைகளும் விரசமில்லாமல் கல்கி போல இருக்க வேண்டும் என்றார்.

வளமான தமிழில் வாழ்த்துரைக்க வந்த ம.பொ.சி. அவர்கள் தம்முடைய தனிப் பாணியில் நகைச்சுவை ததும்பப் பேசினார். "ஆண்டவன் என்னை இந்தப் பொன் விழாவில் கலந்து கொள்வதற்காகவே இவ்வளவு நாள் வாழ வைத்தான்" என்று பரவசப்பட்டார்.

"தமிழகம் அடிமைப்பட்டிருந்த நாளில், அத்துடன் தமிழும் அடிமைப்பட்டிருந்த காலத்தில் தோன்றிய ஒரு தமிழ்ப் பத்திரிகை இவ்வளவு ஆண்டுகள் தேய்பிறையில்லாமல் வளர்ந்திருக்கிறது. அது மிகப் பெரிய சாதனை. கல்கி நல்ல தமிழில், உயர்ந்த தமிழில் எழுதினார். ராஜாஜிக்காகக் கல்கியவர்கள் தாங்கிக் கொண்ட தாக்குதல்கள் கொஞ்சமல்ல. தலைசிறந்த எழுத்தாளர், தலையாய தேச பக்தர்" என்று ம.பொ.சி. அமரர் கல்கிக்குப் புகழாரம் சூட்டினார்.

"இந்த எழுத்தாளருக்கு நிறைய கதை திரும்பி வந்து, நொந்து போயிருக்கார்னு தோணுது சார்."

"எப்படிச் சொல்றீங்க?"

"இந்தக் கதைக்கு 'திருப்பி அனுப்பாதே'ன்னு 'டைட்டில்' வெச்சிருக்கார் பாருங்க!"

– சீர்காழி வி. ரேவதி



பௌர்ணமியின் கிரணங்கள் பூமியை வாழ்த்துவது போல, படைப்பாளரான சிவசங்கரி கல்கியை வாழ்த்திப் பேசினார். இந்த நூற்றாண்டில் கொண்டாடப்பட்ட சிறந்த இலக்கிய விழாக்களில் ஒன்றாகப் பிற்காலத்தில் பேசப்படப் போகிற கல்கியின் பொன் விழா வைபவத்தில் தாம் கலந்து கொள்வது பற்றிப் பெருமகிழ்ச்சி அடைவதாகச் சொன்னார்.

சிவசங்கரியின் பாட்டி உடல்நலம் குன்றிய போது "பொன்னியின் செல்வன் முடிவதற்குள் என்னை அழைத்துக் கொண்டு விடாதே" என்று இறைவனிடம் பிரார்த்தனை செய்தாராம். கல்கியின் எழுத்து அவ்வளவு தூரம் பலர் உணர்வுகளைப் பாதித்திருந்தது. ஒரு நல்ல பத்திரிகை எப்படி ஒரு நல்ல எதிர்க் கட்சி போல இருந்து செயலாற்ற வேண்டும் என்பதற்குக் கல்கி எடுத்துக்காட்டாக விளங்குகிறது. தராசு போலிருக்க வேண்டும் என்பார்கள். கல்கியில் வரும் கேள்வி பதில் தராசுதான்" என்று புகழ்ந்தார்.

'சிந்தித்துக் கொண்டே பிறந்த பிறவியான சோ தமாஷாய்ச் சொல்வதெல்லாம் உண்மையாகிப் போகிறது. உண்மையாகச் சொல்வதெல்லாம் தமாஷாகிப் போகிறது' என்று வைரமுத்து கூறியதும் சபையில் அலை அலையாகச் சிரிப்பு. சபையோர் 'சோ'வென்று பெய்த நகைச்சுவை மழையில் நனைந்தார்கள்.

"சதாசிவம் அவர்கள், எம். எஸ். அவர்கள், ராஜாஜி, கல்கி அவர்கள் எப்படிப் பட்டவர்கள்! இப்படிப்பட்ட பெரிய மனுஷாளுடைய அஸோஸியேஷன் ஒரு பத்திரிகைக்குக் கிடைக்கும் என்பதே நினைத்துப் பார்க்க முடியாத விஷயம்.

"ஆபாசம், பரபரப்பு வெறும் gossip இதுதான் விற்பனையாகும் என்ற லெவலுக்குப் பத்திரிகை உலகம் போய்க் கொண்டிருக்கும் போது டீஸெண்டா ஒரு பத்திரிகையை வெற்றிகரமாகவும் நடத்த முடியும் என்று இதழுக்கு இதழ் நிரூபித்துக் கொண்டிருக்கிறார் ராஜேந்திரன். தந்தையின் புகழையும் செல்வாக்கையும் கூடத் தாங்கிக் கொண்டு அதற்கு ஒரு குறையும் இல்லாமல் அதே லெவல்ல பத்திரிகையை நடத்த முடியும் என்று காட்டிண்டிருக்காரே, அது ரொம்பப் பெரிய சாதனை. கம்பி மேலே நடக்கற மாதிரிதான் பத்திரிகை நடத்திண்டு வரார். பல மாவட்டங்களின் பிரச்னைகளையெல்லாம் எடுத்துச் சொல்லி - இதெல்லாம் ஒரு லெவ்லிங் பாயிண்டே இல்லை - ஆனாலும் இதையெல்லாம் நாம் கொடுக்கணும், ஜனங்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே பல பகுதிகள் கல்கியில் வெளியிடுகிறார்" என்று மனம் திறந்து பாராட்டினார் சோ.

**ப**ழமைக்கும் புதுமைக்கும் பாலம் கட்டும் கல்கி போல் இளமைக்கும் முதுமைக்கும் பாலம் கட்டினார் இயக்குனர் திலகம் கே. பாலசந்தர். ''நான் சிறுவனாக இருந்த போது என் பெற்றோர் கல்கியின் எழுத்துக்களைப் படித்ததைப் பார்த்தேன். நான் வயதுக்கு வந்த இளமைப் பருவத்தில் அவருடைய நவீனங்களை ரசித்துப் படித்தேன். இன்று என் குழந்தைகள் அதே ஆர்வத்தோடு கல்கியின் கதைகள் நாவல்களைப் படிப்பதைப் பார்க்கிறேன். என் பேரக் குழந்தைகளும் இதே ஆர்வத்தோடு படிப்பார்கள் என்பதில் ஐயமில்லை. பத்திரிகைகளில் ஏறக்குறைய இரண்டு அல்லது இரண்டரை ஆண்டுகள் வெளியான தொடர் கதைகள் அதே பத்திரிகையில் இரண்டாவது முறை பிரசுரிக்கப்படுவதும், அவற்றுக்கு முதல் முறைபோன்றே அல்லது அதை விட அதிகமான வரவேற்புக் கிடைப்பதும் கல்கியவர்களுடைய படைப்புக்களுக்கு மட்டுமே உரித்தான பெருமையாகும். கல்கியுடைய ஆடல் பாடல் சினிமா விமரிசனங்களை மீண்டும் கல்கியில் வெளியிட்டால் விமரிசனம் எப்படி எழுத வேண்டும் என்பதற்கு ஒரு முன்னுதாரணமாகத் திகழும்'' என்று ஒரு வேண்டுகோளையும் வைத்தார். பக்த மீரா திரைப்படம் மூலம் கல்கியும் சதாசிவமும் எம். எஸ். அவர்களும் ஆற்றிய பணியை நினைவுகூர்ந்தார்.

கல்கியவர்களின் பத்திரிகை நடத்தும் திறமையை மெச்சிப் பேசினார் அவருக்குப் பின் ஆசிரியப் பணியிலிருந்த மீ. ப. சோமு. ''ஒரு ஆசிரியர் என்ற முறையில் அவர் கையாண்ட உத்திகளுக்கு முன்னுதாரணங்களே இல்லாத நிலையில், பல புதிய உத்திகளைத் தாமே கையாண்டு வெற்றி கண்டவர் கல்கி. எதையுமே பலமான அஸ்திவாரத்துடன் அமைத்தார் கல்கி.'' ஆனந்த விகடன் பத்திரிகைக்கும் அவர் போட்ட அஸ்திவாரத்தையும் ஆற்றிய தொண்டையும் பாராட்டிப் பேசினார் சோமு.

**க**டந்த ஐம்பது ஆண்டுகளாகக் கல்கி வளர்த்த பண்பாட்டை அன்று கண்ணுக்கு மெய்யாக நிதர்சனமாகக் கண்டோம். எந்த விழாவிலாவது நன்றியுரையின் போது கூட்டம் கலையாமல் இருந்ததை யாராவது கண்டதுண்டா?

அன்று டைரக்டர் வி. முரளி நன்றியுரை நவின்ற போது ஒருவர் என்றால் ஒருவர் கூட எழுந்திருக்கவில்லை. அத்தனை பேரும் இதனைத் தங்கள் விழாவாகக் கருதி தாங்களே நன்றி கூறுவதாக எண்ணி அமர்ந்திருந்தனர்.

அன்று பிற்பகலில் கல்கி ஏஜெண்டுகளின் கூட்டமும் நடைபெற்றது. டில்லி முதல் நாகர்கோயில் வரை உள்ள நூற்றுக் கணக்கான ஏஜெண்டுகள் பொங்கிய பெருமிதம் முகத்தில் தெரியக் கூடியிருந்தனர். அவர்கள் சார்பாகச் சிலர் கல்கிக்குப் பொன் விழா வாழ்த்துத் தெரிவித்தனர். ஒருவர், '' 'கல்கி - கையிலிருந்தால் பெருமை; படித்துப் பார்த்தால் அருமை' என்பது நூற்றுக்கு நூறு உண்மையான விளம்பர வாசகம்'' என்று கூறி மகிழ்ந்தார். இத்தகைய அருமையான ஏஜெண்டுகளைப் பெற்றிருப்பதும் கல்கிக்குப் பெருமை என்றே அவர்கள் காட்டிய அன்பு உணர்த்தியது.

எல்லாவற்றுக்கும் சிகரமாக அன்று நடந்தது பூர்ணம் விசுவநாதன் குழுவினர் நடத்திய நாடகம். கமலாவின் கல்யாணம் என்று கல்கி எழுதிய சிறுகதையை நாடக வடிவில் அமைத்துத் தாமே அற்புதமாக நடித்தார் பூர்ணம். கல்கி ஆரம்பித்த சமயத்தில் ஆசிரியர் ''கல்கி'' எழுதிய ஒரு சமுதாயச் சீர்திருத்தச் சிறுகதை இந்தக் காலத்தில் கூடப் பொருத்தமாக இருக்கிறது என்பதை நிரூபித்தார் பூர்ணம். நடித்தவர்கள் அனைவரும் உணர்ந்து உணர்ச்சியோடு நடித்தார்கள். பூர்ணம் அவர்கள் நாடகத்தை அறிமுகம் செய்த புது உத்தி சுவாரஸ்யமாக இருந்தது. அறிமுகத்தையே நாடகமாக்கி விட்டார்!

சமுதாயத்தைச் சீர்திருத்துகிறேன் என்று புறப்படுவது சுலபம். ஆனால் அதிலிருந்தே புதிய சிக்கல்கள் தோன்றவும் கூடும் என்பதை அழகாகக் கூறி, சொல்லுக்கும் செயலுக்கும் வித்தியாசமில்லாமல் நடப்பவர்களால்தான் இந்தச் சிக்கல்களைச் சந்தித்து வெற்றி காண முடியும் என்பதை அழகான கதையோட்டத்தில் பொதித்து அளிக்கிறார் கல்கி. அதை அரங்கத்தில் உயிர்ப்பித்தார் பூர்ணம்.

அமரர் கல்கியின் எழுத்துக்கள் சிரஞ்சீவித் தன்மை பெற்றவை என்பது மறுபடியும் இந்த நாடகம் மூலம் அன்று நிரூபணமாயிற்று.

அட்டை மற்றும் கட்டுரைக்கான படங்கள் : **யோகா**

''தலைவருக்கு ஞாபகமறதி அதிகமாயிடிச்சுன்னு சொல்றியே, எப்படி...?''

''நேற்று தொகுதிப்பக்கம் போயிருந்தாரே...!''

– சீர்காழி வி. ரேவதி



# மண்டையைப் பிளக்குது மருத்துவக் கல்லூரி விவகாரம்!

''இது ஜனநாயக நாடுதானா என்று எங்களுக்குச் சந்தேகம் வருகிறது. ஹாஸ்டல்களை மூடி, அறைகளுக்கு இரட்டைப் பூட்டுப் போட்டு எங்களை வெளியே அனுப்பினார்கள். சரி, என்று கல்யாண மண்டபத்தில் தங்கினோம். ஆனால் எத்தனை மிரட்டல்கள்! போலீஸ்காரர்கள், ஆளும் கட்சி குண்டர்கள் என்று மாறி, மாறி மிரட்டவே வேறு வழியின்றி, கல்யாண மண்டபத்தையும் காலி செய்து விட்டு, பல்வேறு நண்பர்கள் வீட்டில் தங்கியுள்ளோம். சென்னையில் உள்ள கல்யாண மண்டபங்களிலும், லாட்ஜ்களிலும் போலீஸார் 'எங்களுக்குத் தங்க இடம் கொடுக்கக் கூடாது' என்று சொல்லி விட்டதால், அவர்கள் பயப்படுகிறார்கள். இந்த நிலையில் தினசரி ஏதாவது ஒரு பூங்காவில் சந்தித்து நாங்கள் பேச வேண்டியிருக்கிறது'' என்றார்கள், தமிழ்நாடு மருத்துவக் கல்லூரி மாணவர்கள் - பயிற்சி டாக்டர்கள் சங்கத் தலைவரான டாக்டர் கோபாலகிருஷ்ணனும், இணைச் செயலாளரான டாக்டர் லட்சுமி நரசிம்மனும்.

இந்த நிருபருடன் அவர்கள் நேப்பியர் பூங்காவில் பேசிக் கொண்டிருக்கும்போதே இருமுறை போலீஸ்காரர் வந்து யார் என்று விசாரித்து விட்டு, ''இடத்தைக் காலி செய்யுங்கள்'' என்று எச்சரிக்கை கொடுத்து விட்டுப் போனார்.

''எந்த ஒரு கோர்ட் தீர்ப்பையும் அமுல்படுத்த அரசுக்குப் பல காலம் ஆகும். ஆனால் ராமச்சந்திரா கல்லூரி விஷயத்தில் என்ன நடந்தது? தீர்ப்பு வந்ததும், உடனடியாக ஜட்ஜ்மெண்ட் காப்பி பெறப்பட்டு, காபினட் கூடி தீர்மானித்து விட்டது. ஆறு நாட்களுக்குள் தனியார் கையில் கொடுத்து விட்டது அரசு. இந்தச் சுறுசுறுப்பை வேறு மக்கள் நல விஷயங்களில் அரசு காட்டுமா?'' என்று கேட்டார் கோபாலகிருஷ்ணன்.

''கல்லூரி பொறுப்பை ஏற்க உடையார் வந்த போது மாணவ, மாணவிகள் தர்ணா செய்தோம். போலீஸாரும் அ.தி.மு.க. அடியாட்களும் எங்களைத் தாக்கினார்கள். ஆண் காவலர்களால் மாணவிகள் பலர் தாக்கப்பட்டனர். எங்கள் சங்கச் செயற்குழு உறுப்பினர் ஒருவர் பயங்கரமாகத் தாக்கப்பட்டார்'' (மந்திரி இதை மறுத்திருக்கிறார்)

''ஹைகோர்ட் தீர்ப்பை ஏற்றுச் செயல்படுவது தவறு என்கிறீர்களா?''

''இந்த மருத்துவக் கல்லூரியை அரசு ஏற்று நடத்தப் பல காரணங்கள் இருக்கின்றன. இந்தக் கல்லூரி மற்றும் மருத்துவமனைக்குச் சொந்தமாக 176 ஏக்கர் நிலம் இருக்கிறது. அதில் 54 ஏக்கர்தான் மருத்துவக் கல்லூரி அறக்கட்டளைக்குச் சொந்தமானது, மீதி 122 ஏக்கர் அரசுக்குச் சொந்தமான புறம்போக்கு நிலம். இதன் மதிப்பு இன்று கோடிக்கணக்கில். மேலும் இந்தக் கல்லூரிக்கு அனுமதி தரும்போதே 'நன்கொடை' வசூலிக்கக் கூடாது என்று நிபந்தனை போடப்பட்டது. நிர்வாகம் அதன்படி நடந்ததா? அது மட்டுமல்ல. எந்தக் காரணமும் காட்டாமல் கல்லூரியை அரசு எடுத்துக் கொள்ளலாம் என்று சொல்லப்பட்டு இருக்கிறது. அரசு எடுத்துக் கொண்ட இந்த மூன்றாண்டுகளில் கிட்டத் தட்ட 10 கோடி ரூபாய் செலவு செய்து இருக்கிறது. மற்றும், அகில இந்திய மருத்துவ கவுன்ஸிலின் அங்கீகாரம் பெறுவதற்காகப் பல புதிய ஆசிரியர்கள் நியமிக்கப்பட்டார்கள். பல வசதிகளையெல்லாம் அரசு செய்தது. முன்பு தனியாரிடம் இருந்த போது மருத்துவக் கவுன்ஸில் அங்கீகாரம் கொடுக்கவில்லை. சமீபத்தில் சுப்ரீம் கோர்ட் ஒரு தீர்ப்பில் 'கல்வி நிறுவனங்களில் மாணவர்களைச் சேர்த்துக் கொள்வதற்கு நன்கொடை வசூலிப்பது அரசியல் சாசனத்திற்குப் புறம்பானது' என்று தீர்ப்பளித்துள்ளது. இந்த நிலையில் அரசு ஹைகோர்ட் தீர்ப்பை எதிர்த்து அப்பீல் செய்யாதது நியாயமா? எங்களைப் பொறுத்தவரை நாங்கள் 1985-ம் ஆண்டிலிருந்தே தனியார் மருத்துவக் கல்லூரிகள் இருக்கக் கூடாது என்று போராடி வருகிறோம். தி.மு.க. ஆட்சியின்போதே போராடினோம். இப்போது இந்த ஆட்சியிலும் போராடுகிறோம். கடந்த மார்ச் மாதம் முதல்வர் ஜெயலலிதா உத்தரவுப்படி எங்களைச் சந்தித்த சுகாதார மந்திரியும், செயலாளரும் 'தமிழ்நாட்டில் இனி தனியார் மருத்துவக் கல்லூரி தொடங்க அனுமதிக்கப்படமாட்டாது' என்று உறுதியளித்தார்கள். தொடங்க நினைத்தால் அதை அரசு தடுக்கும் என்றும் அறிவித்தார்கள். அதன்படி பார்த்தால், மீண்டும் தனியார் கைக்கு ராமசந்திரா கல்லூரியைப் போக விடாமல் பாதுகாத்துக் கொள்வது அரசின் கடமை அல்லவா?''

''கோடிக்கணக்கில் நஷ்டஈடு கொடுக்க வேண்டியிருக்கிறது. இப்போதுள்ள நிதி நிலையில் அவ்வளவு கொடுத்து கல்லூ

ரியை அரசு எடுத்துக் கொள்ள முடியாது' என்று அரசு அறிவித்துள்ளதே?''

''அரசு நிலத்தின் மதிப்பு மட்டுமல்ல, கடந்த மூன்றாண்டுகளில் அரசு செலவழித்த தொகையையும் சேர்த்துப் பார்க்கும் போது எந்த நஷ்டஈடும் கொடுக்க வேண்டிய தில்லை.''

''தனியாரிடம் கல்லூரி போவதால் மாணவர்கள் பயப்படத் தேவையில்லை யென்றும், புதிதாகக் கட்டணம் எதுவும் கேட்கப்பட மாட்டாது என்றும் அரசு கூறி யுள்ளதே?''

''தனியாருக்கு அரசு என்ன வக்காலத்தா? அவர்கள் என்ன செய்வார்கள் என்று இவர்களுக்குத் தெரியாதா? மேலும் மாண வர்களின் சம்பளம் மட்டுமா முக்கியம்? அதைவிட முக்கியமானது மருத்துவக் கல்லூரி மாணவர்களுக்கு Clinical material. நோயாளிகள்தான் பிரதான Clinical material. அரசு ஆஸ்பத்திரியாக இருந்தால் நிறையக் கூட்டம் வரும். பலதரப்பட்ட கேஸ்கள் வரும். எங்களுக்கும் நல்ல பயிற்சி பெற வாய்ப்பு இருக்கும். அரசு ஆஸ்பத்திரியில் நோயாளியை ஒன்றுக்குப் பத்து முறை மாணவ டாக்டர்கள் சோதனை செய்தாலும், அவன் ஒன்றும் சொல்ல மாட்டான். ஆனால் தனியாரிடம் பணம் கொடுத்து மருத்துவம் பார்த்துக் கொள்பவனை, பலமுறை சோதனை செய்யப் போனால் எரித்து விழுவான். மேலும் பணம் தந்து சிகிச்சை பெற வேண்டியிருப்பதால் ஏழை பாழைகளான நோயாளிகள் வர மாட்டார்கள். பணக்கார கேஸ்கள்தான் பார்ப்போம். சாமானியருக்கு வரும் நோய்கள் பற்றிய அறிவு எங்களுக்கு விருத்தி அடையாது. இதெல்லாம் முக்கியமில்லையா?''

''ராமச்சந்திரா கல்லூரியை தி.மு.க. அரசு எடுத்துக் கொண்டது அரசியல் பழி வாங்கல்தானே!''

''எங்களைப் பொறுத்தமட்டில் இந்த விஷயத்தில் அரசியலைப் பார்க்க விரும்ப வில்லை. தி.மு.க.வின் நோக்கத்தில் ஒரு வேளை அரசியல் இருந்திருக்கலாம். இப் போதுள்ள அரசின் போக்கிலும் அரசியல் இருக்கலாம். அதைப் பற்றி நாங்கள் ஒன்றும் சொல்வதற்கில்லை. மருத்துவக் கல்லூரிகள் அனைத்தும், அரசிடம்தான் இருக்க வேண்டும் என்ற பொதுவான கொள்கை அடிப்படையில் 1985லிருந்தே போராடி வருகிறோம். அந்த அடிப்படை யில்தான் ராமச்சந்திராவைப் பார்க்கிறோம்.

''ஹைகோர்ட் தீர்ப்பைக் காரணம் காட்டி மருத்துவக் கல்லூரியை தாரை வார்க்க அரசு முயலக் கூடாது. சுப்ரீம் கோர்ட்டுக்குப் போவதா வேண்டாமா என்று உடையாரின் வக்கீலிடமே ஆலோ சனை கேட்டிருக்கிறார்கள். தி.மு.க. ஆட்சி சமயத்தில் நாங்கள் போராடிய போது, மீதம் உள்ள இரண்டு தனியார் மருத்துவக் கல் லூரிகளையும் (அண்ணாமலை, பி.எஸ்.ஜி.) அரசு எடுத்துக் கொள்ள முயற்சிகளை மேற்கொள்ளும் என்று அறிவித்தது. 'கல்லூ ரியை அரசியல் காழ்ப்புணர்ச்சி காரணமாக எடுத்துக் கொண்டார்கள்' என்று தனியார் நிர்வாகம் இப்போது சொல்கிறது. ஆனால் அப்போது, 'நாங்களே அரசிடம் ஒப்படைக் கிறோம்' என்றல்லவா எழுதிக் கொடுத் திருக்கிறார்கள்! பயந்து போய் எழுதிக் கொடுத்ததாக வைத்துக் கொண்டால் கூடக் கோர்ட்டுக்குப் போவதற்கு ஏன் இரண்டு வருடங்கள் ஆயிற்று? அரசியல் சூழ்நிலை சாதகமாக வரட்டும் என்று காத்துக் கொண்டிருந்ததுதானே காரணம்?''

**ம**ருத்துவக் கல்லூரி மாணவர்களுக்கு ஆதரவாக அரசு மருத்துவமனை டாக்டர் களும் கால வரையறையின்றிப் போராட்டம் நடத்தத் தீர்மானித்து இருக் கிறார்கள். (இவர்களுடன் பேச்சு வார்த்தை நடத்தத் தயார் என்று சொல்லியிருக்கிறார் மந்திரி)

''எங்களுக்குப் பொது மக்கள் ஆதரவும் நன்றாக இருக்கிறது. அரசின் செயலை, தெரு நாடகங்களாகப் போடும் போது மக்கள் நன்கு புரிந்து கொள்கிறார்கள். ஒரு ரிக்ஷாக்காரர் 25 ரூபாய் நன்கொடை கொடுத்து எங்களை உற்சாகப்படுத்தினார்!'' என்றார் கோபாலகிருஷ்ணன்.

இந்த இதழ் நேயர்களின் கரங்களுக்கு வருமுன், ஒரு நல்ல முடிவு ஏற்பட்டு மக்க ளுக்கு அவதி தவிர்க்கப்படும் என்று நம்பு வோம்.

– தில்லப்பா

---

''அந்த போட்டோ ஸ்டுடியோ வச்சிருப்பவர், அரசியல்ல ஈடுபாடு உள்ளவரா..?''

''ஆமாம். எப்படி கண்டுபிடிச்சே...?!''

''போட்டோ எடுக்கணும் சொன்னதும், பாஸ் போர்ட் சைஸா, கட்-அவுட் சைஸான்னு கேட்டாரே...!''

- புதுவண்டி ரவீந்திரன்





# கல்கி

1992
ஆகஸ்டு 16
மலர் : 51
இதழ் : 3
ஆங்கீரச
ஆடி 32



தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

# அவமான அத்தியாயம்

உத்தரப்பிரதேச கல்யாண்சிங் அரசுக்கு மற்றுமொரு அவமான அத்தியாயம் எழுதப்பட்டு விட்டது. சமீபத்தில் பிலிபிட் மாவட்டத்தில் நடந்த படுகொலைகள் ஆட்சியின் திறமையின்மையை அடிக்கோடிட்டுக் காட்டுகின்றன.

இரண்டு அம்சங்கள் கவனத்துக்குரியன. முதலாவது இந்த வட்டாரத்தில் பயங்கரவாதிகளின் ஊடுருவல் கடந்த பல காலமாகவே இருந்து வந்திருக்கிறது. கானகங்களில் முகாம்கள் அமைத்து வருவதோடு இதற்கு முன்னரும், ஏப்ரல் மே மாதங்களில், பல படுகொலைகளைச் செய்துள்ளனர். அவ்வாறு இருந்தும் மக்களுக்கு முன்னெச்சரிக்கையாகப் போதிய பாதுகாப்பைத் தர அரசு தவறி விட்டது. 29 பேர் அரக்கத்தனமான முறையில் கழுத்து நெறித்துக் கொல்லப்பட்டிருக்கிறார்கள்.

பரிதாபத்துக்குரிய இரண்டாவது அம்சம் மக்களின் வறுமை. இந்தக் கானகங்களில் பயங்கரவாதிகள் உள்ளனர் என்பது மக்களுக்குத் தெரியும். ஆனபோதிலும் உயிரைப் பணயம் வைத்து அந்தப் பகுதிக்கு மக்கள் செல்லக் காரணம் அங்கே உண்பதற்குக் கிழங்கு கிடைக்கும் என்பதுதான். கிழங்கு சேகரித்து உண்டு பசியாறலாம்; பாக்கியை விற்று இரண்டு காசு சம்பாதிக்கலாம். இந்த ஆசைதான் அவர்களை ஆபத்து நோக்கி விரட்டியிருக்கிறது. ஆக இந்த வட்டார மக்களின் பொருளாதார மேம்பாட்டுக்கு உ. பி. அரசு ஏதொன்றும் செய்யாத குற்றமும் சேர்ந்து கொள்கிறது.

"ஏழைமை எங்குதான் இல்லை?" என்று வாதாடலாம். அந்த வாதத்தில் வலு இல்லை. குறிப்பாகப் பயங்கரவாதம் தலைதூக்கி தன் கைவரிசையைக் காட்டத் தொடங்கியுள்ள பகுதிகளில் உள்ள மக்களை எச்சரித்து, அவர்கள் பாதுகாப்புக்கும் நல்வாழ்வுக்கும் அரசு நிச்சயம் உதவியிருக்க வேண்டும். இந்தக் கடமையில் உ. பி. அரசு தவறி விட்டது.

"பயங்கரவாதிகள் ஊடுருவலை மாநில அரசு எப்படி தடுக்க முடியும்? மத்திய அரசை உதவி கேட்டோம்; போதிய அளவு பட்டாளம் அனுப்பவில்லை" என்று கல்யாண்சிங் பழியை மத்திய அரசு மீது சுமத்தியிருக்கிறார். இதுவும் செல்லாத வாதமே. மத்திய அரசு இவர் கேட்ட அளவில் ராணுவத்தை அனுப்பவில்லை என்றாலும் கணிசமான அளவில் அனுப்பியே இருக்கிறது. அவர்கள் சரியான முறையில் பயன்படுத்திக் கொள்ளப்படவில்லை என்பதும் பயங்கரவாதிகளின் நடமாட்டம் பற்றி உ.பி. அரசால் போதிய அளவு தகவல்களைப் பெற முடியவில்லை என்பதும் தெளிவு. உளவுத் துறை உபயோகமற்ற துறையாக இருந்திருக்கிறது.

பொறுப்பைத் தட்டிக் கழிக்காமல் கல்யாண்சிங் இனிமேலும் பிரச்னைகளைச் சரியான முறையில் சந்திக்கத் தயாராவதே நல்லது. மத்திய அரசு, எதிர்க்கட்சி ஆளும் மாநில அரசு என்ற பேதம் நாட்டின் பிரச்னைகளைச் சந்திக்கும் போது இருக்கக் கூடாது. மனிதாபிமானப் பிரச்னையாக, நாட்டைக் கட்டிக் காக்கும் ஒருமைப்பாடு பிரச்னையாக, மத்திய - மாநில அரசுகள் கைகோத்துச் செயல்பட வேண்டும். காங்கிரஸ் கட்சி தனது பார்வையாளர்களையும் பி.ஜே.பி. தனது பார்வையாளர்களையும் தனித்தனியே நிலைமையை ஆராய அனுப்புவதால் என்ன பயன்? பரபரப்பான பரஸ்பர குற்றச்சாட்டுக்கள்தான் நிகர லாபமாக இருக்கும்.

பஞ்சாபிலும் காஷ்மீரிலும் பயங்கரவாதத்தை ஒடுக்க ராணுவம் தீவிரமாக முனையும் போது, நேபாளம் வழியாக பயங்கரவாதம் உ.பிக்கு ஊடுருவுகிறது. உ.பி. காடுகள் வசதியான புகலிடமாக பயங்கரவாதிகளுக்கு அமைகின்றன. ஆக, உ.பி. அரசு மக்களுக்குப் பாதுகாப்பு அளிப்பது என்பது ஒருபுறமிருக்க, அடிப்படையான பஞ்சாப், காஷ்மீரப் பிரச்னைகள் தீர்க்கப்பட வேண்டியது அதனினும் அவசியமானது.

நீண்ட கால அரசியல் அனுபவமும் திறமான புத்தியும் கொண்ட பிரதமரிடம் தேசம் எவ்வளவோ எதிர்பார்க்கிறது. எல்லாப் பிரச்னைகளையும் தீர்க்க மந்திரக்கோல் இல்லைதான். ஆனால் ஒவ்வொன்றாக அணுகி, காலக்கெடு நிர்ணயித்து, தீர்வுகாண ராஜதந்திரமாவது இருக்க வேண்டுமே!



★ நிரப்பப்படும் சிலிண்டர்கள் அப்படியே நுகர்வோரை அடையுமா?

# சிலிண்டர் காஸ் திருட்டைத் தடுக்க முடியாதா?

"வழக்கமாக நாற்பது நாட்களுக்கு வரும் காஸ் சிலிண்டர் இந்த முறை முப்பது நாட்களிலேயே தீர்ந்து விட்டது...!"

"எனக்கு ரொம்ப சந்தேகமாக இருக்கிறது... சிலிண்டரை வேறு யாருக்கோ சில மணி நேரங்கள் உபயோகிக்கத் தந்து விட்டு எடுத்து வருகிறார்களோ என்று..."

"பதிவு செய்த வரிசைப்படி சிலிண்டர்கள் வருவதில்லை. எனக்கு அப்புறம் பதிவு செய்தவர்களுக்கு எனக்கு முன்னால் சிலிண்டர் கிடைக்கிறது..."

- இப்படி பல புகார்கள் சமையல் காஸ் சிலிண்டர்கள் விநியோகம் பற்றிக் கூறப்படுகின்றன.

சமையல் எரிவாயு விநியோகத்தைத் தங்கள் பதினைந்து கிளை அலுவலகங்கள் மூலம் செய்து வரும் TUCS நிறுவனப் பொது நிர்வாகியான ரவிகுமாரிடம் இந்தப் புகார்களையெல்லாம் தெரிவித்த போது அவர் சில உபயோகமான தகவல்களை அளித்தார் :

"நுகர்வோர் ஒவ்வொருவருக்கும் ஒரு சிறு புத்தகம் - பாங்க் பாஸ் புக் போல் - வழங்கியிருக்கிறோம். காஸ் சிலிண் டருக்குப் பதிவு செய்ததும் அந்தப் புத்தகத்தில், உரிய இடத்தில் பதிவு செய்த நாள், நேரம், ஆகியவற்றைக் குறிப்பதோடு, சிலிண்டர் வழங்கப்படுவதற்கான Waiting list number ஐயும் அதில் கவனமாகக் குறித்துக் கொள்ள வேண்டும்.

"இப்படிச் செய்வதன் மூலம், தவறு நடந்திருக்கிறது என்ற சந்தேகம் தோன்றினால் அதை விசாரிப்பதற்கான தகுந்த ஆதாரங்களை நுகர்வோரே எங்களுக்கு அளிக்க முடியும்.

"சிலிண்டரைப் பெற்றுக் கொண்டு பணம் கொடுத்து, கையெழுத்துப் போடுவதற்கு முன்னால் அதனை அடுப்பில் பொருத்திப் பரிசோதிக்க வேண்டும். அப்படி பரிசோதிப்பதற்கு முன்னரே, சிலிண்டரின் மேல் குமிழில் IOC (Indian Oil Corporation) இன் முத்திரையிட்ட 'சீல்' - மஞ்சள் அல்லது சிவப்பு நிறத்தில் இது இருக்கும் - அகற்றப்படாமல் உள்ளதா என்று கவனமாகப் பார்க்க வேண்டும்.

"பின்னர் உங்களுக்கு வழங்கப்பட்டுள்ள புத்தகத்தில் சிலிண்டரைப் பெற்ற நேரம், தேதியைக் குறித்து, அதை எடுத்து வந்து பொருத்திப் பரிசோதித்த சிப்பந்தியின் கையெழுத்தையும் பெறுங்கள்.

"சிலிண்டரில் வாயு குறைவாக இருந்தது என்ற சந்தேகம் எழுந்தால் நீங்கள் ஏஜென்ஸியில் புகார் செய்யலாம். IOC அலுவலகத்தை அணுகலாம். அவர்கள் அந்தக் குறிப்பிட்ட சிலிண்டரை 'டெலிவரி' செய்த நபரை அழைத்து விசாரித்து,

தேவையானால் நடவடிக்கை எடுப்பார்கள்...''

**கா**ஸ் சிலிண்டர் சீக்கிரமாகத் தீர்ந்து போவதற்கு அடுப்பில் உள்ள சில பழுதுகளும் காரணமாக இருக்கலாம். எனவே, எடுத்த உடனே சந்தேகப்பட்டுப் பழியை ஏஜென்ஸியின் பேரில் போடாமல் அடுப்பைப் பழுது பார்ப்பது நல்லது. அது எச்சரிக்கையான நடவடிக்கையும் கூட.

''அடுப்பையோ சிலிண்டரையோ, நாமே பழுது பார்க்க முயலக் கூடாது; சிலிண்டர் எடுத்து வரும் நபரையும் அதைச் செய்யச் சொல்லக் கூடாது. அதற்கெனத் தனியாக ஏஜென்ஸியில் பதிவு செய்து, தகுந்த மெகானிக்கைக் கொண்டே பழுது பார்க்கச் சொல்ல வேண்டும். உதிரி பாகங்கள் தேவைப்பட்டால் நுகர்வோரே அவற்றை நேரடியாக வாங்கித் தர வேண்டும். பழுதுபார்க்க, ஐந்து ரூபாய்தான் கட்டணம். மேற்கொண்டு பணம் தர வேண்டாம்'' என்று கூறுகிறார் ரவி குமார்.

**பெ**ரும்பாலான நுகர்வோர் தங்களுக்கு வழங்கப்பட்டுள்ள அடையாளப் புத்தகத்தை முறையாகப் பயன்படுத்துவதில்லை. அப்படியே பயன்படுத்தினாலும், தங்கள் குறைகளையும் சந்தேகங்களையும் அக்கம் பக்கத்து வீடுகளில் பரிமாறிக் கொள்கிறார்களேயொழிய, புகார் பதிவு செய்து நடவடிக்கையைத் தூண்டும் முனைப்பு அவர்களிடம் இருப்பது இல்லை.

பல ஏஜென்ஸிகளும் நுகர்வோரின் சிண்டு தங்கள் கையில் என்ற மிதப்பில் செயல்படுகின்றன. டெலிபோன் மூலம் சிலிண்டர் 'புக்' செய்தால் மரியாதையுடன் பதில் பெற முடிவதில்லை. 'கணவன் - மனைவி இருவரும் வேலைக்குப் போகிறோம்; காலை ஒன்பதுக்கு முன்னர் சிலிண்டரை அனுப்பி உதவுங்கள்' என்று வேண்டுகோள் விடுத்தால், 'அது சாத்தியமில்லை' என்று ஒரே வரி பதில் கிடைக்கிறது. இதனால் சிலிண்டர் எடுத்து வரும் சிப்பந்திகளிடம் வேண்டிக் கேட்டுக் கொண்டு, தாராளமாக 'டிப்ஸ்' அளித்து, சௌகரியமான நேரத்தில் சிலிண்டரைப் பெற முயற்சி செய்கிறார்கள். ஆக ஏஜென்ஸிகள் தங்கள் சிப்பந்திகளிடம் தாங்களே தவறான செயல்பாடுகளை வளர்ப்பதாகிறது. தவிர்க்கக் கூடாதா?

– கீதா மோஹன்

"சின்ன ஊசிக்குப் போய் இந்த கத்தல் கத்தறீங்களே...? வெளியில 'வெயிட்' பண்ணிட்டிருக்கிறவங்க ஓடிப் போயிட்டா, உங்களை நான் சும்மா விட மாட்டேன், சொல்லிட்டேன்....!"

-சீர்காழி. வி. ரேவதி





''ரொம்ப அநியாயமுங்க!''
''எதைச் சொல்றீங்க?''
''கட்-அவுட்டைத் திறந்து வைக்க அமைச்சர் வர்றாராம்!''

எஸ். முகம்மது



# பாலம்

●● 1994-ல் ALL INDIA MEDICAL ENT EXAM எழுத இருக்கிறேன். அதற்குத் தேவைப்படும் NOTES இருந்தால் எனக்குத் தந்து உதவுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

– வி. ஸ்ரீனிவாசன்,
23, வ. உ. சி. காலனி
– இரண்டாம் தெரு,
அமைந்தகரை,
சென்னை – 600 029.

●● தேசிங்கு ராஜன் பற்றிய முழு விவரங்களும் உள்ளடங்கிய "செஞ்சிக் கோட்டை வரலாறு" என்ற அரிய புத்தகம் என்னிடம் உள்ளது. தேவைப்படுவோருக்குக் குறைந்த விலைக்குத் தரப்படும்.

– ஜெ. பாபு,
5, சாவடி தெரு,
சிறுகடம்பூர்,
செஞ்சி – 604 202.

●● சென்னபுரி அன்னதான சமாஜத்தில் ஒன்று முதல் ஒன்பதாம் வகுப்பு முடிய இலவச உணவும் தங்கும் வசதியும் அளிக்கப்படுகிறது. படிக்க விருப்பமுள்ள ஏழைப் பையன்கள் விண்ணப்பிக்க முகவரி :

– கௌரவச் செயலர்,
சென்னபுரி அன்னதான சமாஜம்,
9, தைனியப்பன் நாயகன் தெரு,
பூங்கா நகர்,
சென்னை – 3.

●● சிறு தொழிலாகக் காளான் உற்பத்தி செய்கிறேன். உலர்ந்த காளான்களை விற்பனைக்காக மொத்தமாக வாங்க விரும்புவோர் கீழ்க்கண்ட முகவரியில் தொடர்பு கொள்ளவும்.

– டி. எம். வீரகுமார்,
373, உடையார் காலனி.
காங்கயம் அஞ்சல்,
பெரியார் (மாவ) 638 701.

●● ஒன்று முதல் ஐந்து ஹெக்டேர் நிலங்களில் (உவர் நீர் நிலம்) விஞ்ஞான முறையில் இறால் வளர்ப்பதற்குச் சிறிய முறையிலே திட்டங்கள் தீட்டி, நிலம் தேர்ந்தெடுப்பதிலிருந்து பண்ணையை வெற்றிகரமாக நடத்துவது வரை உதவக் கூடிய தொழில்நுட்பம் தெரிந்த நம்பிக்கையான நபர்கள் தேவை. அனுபவம், எதிர்பார்க்கும் சம்பளம் முதலிய விவரங்களுடன் விண்ணப்பிக்கவும்.

– ஏ. ஐயப்பன்,
20, 7வது கிராஸ்,
7வது மெயின்,
ஸ்ரீனிவாச நகர்,
புதூர்,
திருச்சி – 17.

●● பின்வரும் ஆங்கில நூல்களைப் படிக்க விருப்பம். விலைக்கோ இரவலாகவோ தந்து உதவவும்.

The World Crisis – Winston Churchill

Decline and Fall of the Roman Empire – Edward Gibbon.

என்னிடம் Das Capital மூன்று பகுதிகள் உள்ளன. தேவைப்படுவோர் எழுதவும்.

– கே. கே. எஸ். நாதன்,
28, நான்காம் கிழக்கு மெயின்,
காந்தி நகர்,
வேலூர் – 632 006.

●● கடந்த ஐந்து ஆண்டுகளாக அரசு அங்கீகாரம் பெற்று இயங்கி வரும் இந்தத் தட்டச்சுப் பள்ளியில் மூன்று வசதியற்ற மாணவ மாணவியருக்கு இலவசமாகத் தமிழ், ஆங்கிலம், ஹிந்தி ஆகிய மும்மொழிகளிலும் தட்டச்சுப் பயிற்சி அளிக்கப் படவிருக்கிறது. தேர்வுக் கட்டணம் மட்டுமே வசூலிக்கப்படும். அணுக முகவரி :

– மோகன் ஸ்கூல் ஆஃப் காமர்ஸ்,
39, கலைமகள் நகர்,
ஈக்காடுதாங்கல்,
சென்னை – 600 097.

●● கர்நாடக நாட்டுப்புற இயலை யொட்டி தமிழில் வெளிவர இருக்கும் முதல் நூல் "கர்நாடக நாட்டுப்புற இயல் – ஓர் அறிமுகம்." ரூ 50/- மதிப்புள்ள இந்நூலை உடன்பதிவு செய்து கொண்டால் முப்பது ரூபாய்க்குப் பெறலாம்.

– தூரவாணி பதிப்பகம்,
மே/பா திருக்குறள் மன்றம்,
சரஸ்வதி சபா மாடி,
தாமோதரன் முதலியார் தெரு,
பெங்களூர் – 560 008.

(பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. எல்லாக் கடிதங்களும் பிரசுரிக்கப்படும் உத்தரவாதம் இல்லை. கடிதப் போக்குவரத்து கிடையாது.)



* "...வட இந்திய சம்பிரதாயப்படி இதை என் கையில கட்டு..."

# பெரிய தம்பி

## காட்சி - 4

### கோயில்

தாத்தா : தாழம்பூ தம்பூரா கேட்டிச்சாம் பப்பாளி பழனிக்குப் போச்சாம்கற கதையா எங்கலே பெரியதம்பி?

திருகாணி : அதோ மாமூ! மாமூ வந்தாச்சு.

பெரிய : இந்த மாதிரி ஒரு பரக்கா வெட்டி எனக்குப் பொண்டாட்டியா...?

பண்ணை : ஏன்லே தாமசம்?

பெரிய : இங்க இருக்கீங்களா? ஊரெல்லாம் தேடி கடைசில திருகாணி ஜடைய வச்சுத்தான் கண்டுபுடிச்சேன்... (சின்ன பண்ணையைப் பார்த்து) ஒங்க மக ஜடை சமயத்துல லைட் அவுஸ் கணக்கா ஒதவுது!

தாத்தா : பத்துல இருந்து பத்தரைக் குள்ள செஞ்சிருங்க... நல்ல நேரம்.

பெரிய : ஆமா சரியான எமகண்டம்! மொதல்ல இதத் திருகாணிய விட்டு என் கையில கட்டச் சொல்லுங்க!

கருப் : இதென்னடா புது மொற?

பண்ணை : பெரிதம்பி... என்னை மறுபடியும் மிருகமாக்கிராத!

பெரிய : என்கிட்ட மட்டும் சக்தி இருந்துச்சு... நிஜமாவே ஒன்னை இப்ப ஒரு மிருகமாக்கிருவேன்! அப்பா... இது வடஇந்திய பாணி!

பண்ணை : ஆனா இது தெக்கு!

தாத்தா : அட காப்பு கட்றாப்புல வடக்க இப்படி ஒரு மொற இருக்குமோ என்னமோ... தேங்கா பறிக்கத் தென்ன போன தேவாரம்... மாங்கா பறிக்கையில...

பெரிய : தாத்தா...!

தாத்தா : சரி அவன் இஷ்டத்துக்குச் செய்யட்டும்...

பெரிய : திருக்காணி வட இந்திய சம்பிர தாயப்படி இத நீ என் கைல கட்டும்மா!

(கட்டுகிறாள்)

கருப் : திருகாணி, பட்சி பறந்திடுச்சு! நீ ஏமாந்துட்ட!

பெரிய : டேய், என்னடா சொல்ற?

கருப் : திருகாணி, ஆசையா உன் பேரை வைச்சு ஒரு கிளியை வளர்த்திட்டு இருந்தா அது திருகாணியை ஏமாத்திட்டுப் பறந்திடுச்சு.

பெரிய : கிளியுமா உன்னை ஏமாத் திடுச்சு? கவலைப்படாத தங்கச்சி!

எஸ்.வி.சேகர்

வசனம்: வெங்கட்

**திருகாணி** : தங்கச்சியா? ஐயோ எங்காதுல சயத்தைக் காச்சி ஊத்துறீங்களே!

**பெரிய** : அதுக்கு ஏன் அணை ஒடஞ்ச மாதிரி கத்தற!...

**பண்ணை** : பெரியதம்பி! நான் மிருகமா மாறுறதுக்குள்ள திருகாணிய ஏன் தங்கச்சின்னு கூப்ட, சொல்லிடு!

**பெரிய** : ஏன்னா திருகாணி என் கைல கட்றதுக்குப் பேரு ராக்கி!

**தாத்தா** : ஓஹோ புரியுது! ராக்கியைக் கட்டி இவளை ஒன் பொண்டாட்டியா ஏத்துக்கிட்ட?

**பெரிய** : காலத்தைத் தாண்டி ஜீவிக்கிற கிழவா..! இதைக் கட்டினா திருகாணி என்னைத் தன் கூடப் பொறந்தவனா ஏத்துக்கிட்டானு அர்த்தம்!

**சி. பண்ணை** : அப்ப, கூட வரப் போறவ இல்லியா?

**பெரிய** : வேணும்னா எங்க தெருக் கோடி வரைக்கும் தாராளமா கூட வரட்டும்... அதுக்கப்புறம் 'மரியாதையா தனியா வீட்டுக்குப் போயிடணும்.

**திருகாணி** : நீங்க இல்லாமலா?

**பெரிய** : தைரியமா போ தங்கச்சி! எவனாவது என் தங்கச்சி மேல கையை வச்சான்... நான் காண்டாமிருகமாயிடு வேன்!

**திருகாணி** : என்னங்க இப்படிப் பண்ணிப் புட்டீக! மண்ணை அள்ளிப் போட்டுட்டீகளே!

**பெரிய** : ச், நிறுத்து...! மண் அள்ளிப் போட நான் என்ன சித்தாளா? அண்ணேன்னு ஒரு தரம் கூப்பிடு தங்கச்சி!

**திருகாணி** : இது மாமான்னு கூப் பிட்ட வாயி!..

**பெரிய** : மாமா மாமான்னு கம்மா கூப்டு உதடு குவிஞ்சு போச்சுப் பாரு! அண்ணேன்னு கூப்டும்மா!

**பண்ணை** : அதைக் கழட்டுல, முதல்ல!

**பெரிய** : அத மட்டும் தொடாதீங்க! இது பாசக்கயிறு... இத அறுத்தா தாலிக் கயித்த அறுக்கற மாதிரி! எனக்கு ராக்கி பாக்யம் கெட்டி!

**பண்ணை** : ஒரு நிமிஷம் நில்லுல!

**பெரிய** : சொல்லுல... ச்...! சொல் லுங்கப்பா!

**பண்ணை** : இந்தப் பெரிய பண்ணை முன் வச்ச காலைப் பின்வச்சதே இல்லை...

**பெரிய** : ஏன் அப்படி? முடக்கு வாதமா?

**பண்ணை** : ஆத்திரத்தைக் கௌறாத..! அப்புறம் நான் என்னவாவேன்னு ஊருக்கே தெரியும்.

**அனைவரும்** : மிருகமாயிடுவாரு.

**தாத்தா** : குரங்கு குட்டி போட்டுச்சாம் குறுக்குல வந்த யானை...

**பெரிய** : ஏய் கிழவா! கம்முனுகிட!

**பண்ணை** : எல்லாரும் கேட்டுக்குங்க... எண்ணி இருபத்து நாலு மணி நேரம்ல!.. அதுக்குள்ள என் பண்ணை ஆளுங்களை ஏவி ஒன் ஒடம்புல ஒத்தக் கயிறு பாக்கி இல்லாம உருவல... எம்பேரு பெரியப்பட்டி பண்ணை பல்லவராயன் இல்லைடா!

**பெரிய** : ஒன் மகனுக்கும் சிலம்பம், மான் கொம்புச் சண்டை, நீப்பந்த குஸ்தி எல்லாம் தெரியும்... ஒன் பண்ணை ஆட்களை 'டூப்' போட்டுப் பந்தாடல, எம்பேரு பெரியபட்டி பெரிய பண்ணை பல்லவராயனுக்கும் கருப்பட்டிதுரை கருப்பாயிக்கும் பொறந்த பெரியபட்டி சின்ன ஜமீன் பெரியதம்பி இல்லை! (அனைவரும் வெளியேற, பெரியதம்பியும் திருகாணி



● "இந்த மஞ்சக் கயித்தை என் இடுப்புலயே தொங்க விட்டுக்கிட்டிருக்கேன்..."

யும் தனியே...)

**திருகாணி** : மாமா! நீ என்னிக்காவது என் கழுத்துல மூணு முடிச்சு போடுவேங்கிற நம்பிக்கைலதான் இந்த மஞ்சக் கயித்தை என் இடுப்புலயே தொங்க விட்டுட்டு இருக்கேன். என்னை ஏமாத்திடாதீங்க மாமா.

**பெரிய** : வருத்தப்படாத தங்கச்சி. இந்தக் கயித்த மாட்ட ஒரு பய வராமயா போயிடுவான்!



"ஆஸ்பத்திரியை மையமா வெச்சு ஒரு சினிமா தயாரிக்கப் போறேன். அதற்குப் பொருத்தமா ஒரு தலைப்புச் சொல்லுங்களேன்!"

"சின்னக் கம்பவுண்டர்!"

– ஞா. ஞானமுத்து

திருகாணி : அப்ப இதுக்குப் பதில்? (பலூனை நீட்டுகிறாள்)

பெரிய : இதான் பதில்! (பலூனை உடைக்கிறான்)

திருகாணி : மாமா!

(சோகப் பாடல் பின்னணியாக ஒலிக்கிறது...)

"பாசம் என்னும் பலூன் ஒன்று
வேசம் இன்றி வந்தது இன்று
பத்து வருசம் ஒடையாமலே...
மச்சான் ஒன் மூச்சு உள்ளே
தவிக்குது சின்னப் புள்ள..."

## காட்சி – 5

(பண்ணை வீடு)

பண்ணை : மாடசாமி... என்னய்யா ஆச்சு?

மாடசாமி : பெரியதம்பிய நம்ம ஆளுங்க ஒன்னும் பண்ண முடியலய்யா!

பண்ணை : ஏன்?

"லாட்டரியில் பத்து லட்ச ரூபாய் கிடைத்ததும் அவருக்குப் பணத் திமிர் அதிகமாயிடுச்சு!"

"என்ன விசேஷம்?"

"காலில் தைத்த முள்ளைப் பிடுங்க 'புருக்லின்' ஆஸ்பத்திரிக்குப் போகப் போறாராம்!"

– ஞா. ஞானமுத்து



மாடசாமி : அவருதானே இந்தக் கதையிலே ஹீரோ. அதனால சிலம்ப ஆட்டத்துலேர்ந்து கடப்பாரை ஃபைட்டு வரை எதுலயும் அவரேதான் ஜெயிக்கிறாரு!

பண்ணை : கைல இருந்த கயத்த கழட்டினாங்களா இல்லியா?

மாடசாமி : குளத்துல குளிக்கப் போகையில கழட்டி வச்சிட்டுப் போயிருக்கான்! கெட்டிக்காரத்தனமா எடுத்துட்டு வந்து அம்மாகிட்ட குடுத்துட்டாங்க!

கருப் : ஆமாங்க!

பெரிய : குளிக்கும் போது நான் கழட்டி வச்ச ராக்கியைத் திருடிட்டாங்க!..

பண்ணை : இதோ பாருடா! பெரிய தம்பீ... சீக்கிரத்துல ஒனக்கும் திருகாணிக்கும் பரிசம்... தயாரா இரு!...

பெரிய : அப்ப திருகாணி என் கைல கட்டின ராக்கி?

பண்ணை : அதை நாகராஜனுக்குக் கொடுத்திடறேன்.

பெரிய : நாகராஜனா அவன் யாரு?

பண்ணை : பாம்பு! ஊர் எல்லையில பல வருஷமா ஒரு புத்து இருக்குது... அதுல நாகராஜன் பல வருஷமா குடி இருக்கான். அந்த புத்துக்குள்ள இந்த ராக்கியைப் போட்டுடறேன்...

பெரிய : பார்த்துப் போடுங்க.. பாம்பும் ஒன்னு போட்டுடப் போகுது!

பண்ணை : அதுக்குள்ள கையை விட்ட எவனுமே உயிரோட இருந்ததில்ல.. தைரியம் இருந்தா புத்துக்குள்ள கையை விட்டு... எடுத்துக்க!

(வெளியேறுகிறார்)

மாடசாமி : விஷயம் புத்து வரைக்கும் பூடிச்சு... அது வாழும் பாம்பு

பெரிய : மத்தது எல்லாம் வாழா வெட்டி பாம்பா?

மாடசாமி : அதுகிட்ட விளையாடாதே... ஒரு நாளைக்கு மூணுவாட்டி சட்டையை உரிக்குமாம்.

பெரிய : பணக்காரப் பாம்பு... நிறைய ட்ரஸ் சேஞ்ஜ் பண்ணிக்குதே..!

மாடசாமி : இருகாணிக்கு ஏகப்பட்ட சொத்து... மடக்கிப் போடுவியா?

பெரிய : இருகாணி பெரிய பான்பீடா, மடக்கி போட்டுக்க.

மாடசாமி : நீங்க என்னதான் கதறினாலும் பரிசம் போடப் போறாங்க!

பெரிய : இப்படி செஞ்சா என்னய்யா? ரெண்டு குடும்பத்துக்குள்ள பகைய உண்டு பண்ணிட்டா?

மாடசாமி : அதெப்படிங்கேன்?

பெரிய : எத்தனை சினிமால வருது! பாத்துக்கிட்டே இரு... கூறு போட்டுடறேன்!

(தொடரும்)



✱ தங்கக்கிளியில் முரளி, ஷாலி

●● ''செம்பருத்தி படத்தில் எனக்கு நல்ல பெயர் கிடைத்தது. அதனால், இந்த வயதிலும் 'பெரியம்மா' படத்தைத் தயாரித்து, நடித்து, இயக்குகிறேன். 'பல முன்னேற்றங்களைக் கண்டுவிட்ட இந்தியாவில், இன்னமும் கூட சில கிராமங்களில் அக்கிரமங்கள் நடக்கின்றன...' என்ற கருத்தை இப்படத்தின் மூலம் மக்களுக்குச் சுட்டிக் காட்டுகிறேன். இதில், ஜான்சிராணி, அன்னை தெரசா, இந்திரா காந்தி இவர்களை நினைவூட்டும் வகையில் ஒரு புரட்சிகரமான கேரக்டரில் நான் நடிக்கிறேன்...'' என்கிறார் பழம்பெரும் நடிகை பானுமதி.



✱ ஜனகராஜ்

●● ''சில இயக்குனர்கள் படத்தின் ஸ்கிரிப்டைத் தயாரிக்கும் போது டிஸ்கஷனில் பலரை வைத்துக் கொண்டு விவாதிக்கிறார்கள்... இருப்பவர்கள் ஆளுக்கு ஒரு கருத்துச் சொல்ல, இறுதியில் இயக்குனருக்கு மிஞ்சுவது குழப்பம்தான். அப்படியல்லாமல் என்னைப் போல் ஒரே ஒரு ஆளை மட்டும் வைத்துக் கொண்டு டிஸ்கஷன் செய்...'' என்று பாரதிராஜாவுக்கு அடிக்கடி அறிவுரை கூறுவாராம் பாலசந்தர். அனுபவ பூர்வமாகவும் அதனை உணர்ந்து கொண்ட பாரதிராஜா, இப்பொழுது ஒரே ஒரு ஆளுடன் மட்டும்தான் 'பட விவாதம்' செய்கிறார்.

●● ''பொதுவாக... சினிமா காதல் கதையில் காதல் - மோதல் - பிரிவு - கல்யாணம் அல்லது தியாகம் இவை மட்டும்தான் இருக்கும். ஆனால், இப்பொழுது நான் நடித்து வரும் 'தங்கக்கிளி' படத்தில் காதலைப் பற்றி ஒரு பாடமே நடத்தியிருக்கிறார் இயக்குனர் ராஜவர்மன். கொஞ்சமும் விரசமின்றிக் காதலைக் கொச்சைப் படுத்தாமல் எடுக்கப்படும் இப்படம் இளசுகளை யோசிக்க வைக்கும்படி இருக்கும்...!'' - இப்படி கூறுபவர், 'தங்கக்கிளி' படத்தில் முரளியின் காதலியாக நடிக்கும் ஷாலி.

●● ''எவ்வளவு நாளைக்கு சார் வெறும் நடிகனா மட்டும் இருக்கறது...? நம்மளும் நாலு காசு பாக்க வேணாமா...! அதனாலதான் இப்போ ஒரு படத்தோட மெட்ராஸ் விநியோக உரிமையை வாங்கியிருக்கேன்... எத்தனையோ ஆர்டிஸ்டுங்க புரொடியூஸர் ஆயிட்டாங்க... நம்ம நேரம் 'ஒர்க் அவுட்' ஆச்சுன்னா பாப்போம்...'' என்று கூறும் ஜனகராஜ், ஆர்.சி. சக்தியின் பத்தினிப் பெண் படத்திற்கான சென்னை விநியோக உரிமையை வாங்கியுள்ளார்.

●● எஸ்.வி. சேகர் சமீபத்தில் விழா ஒன்றில் பாரதிராஜாவிடம் வசமாக மாட்டிக் கொண்டார். ''என்ன சேகர்...? அடிக்கடி நம்மளை வாரிட்டிருக்கீங்களே?'' என்று பாரதிராஜா 'பெரிய தம்பி' சேகரிடம் கேட்க... ''இல்ல சார்... அது வந்து... சும்மா ஒரு காமெடிக்குத்தான் சார்... அப்புறம் சார்... பாத்து ரொம்ப நாளாச்சே நல்லாயிருக்கீங்களா சார்.... ஒண்ணும் தப்பா எடுத்துக்காதீங்க சார்...'' என எஸ்.வி. சேகர் சமாளிக்க ''அதெல்லாம் ஒண்ணுமில்லை... சும்மா தமாஷுக்குக் கேட்டேன்... அப்புறம் எப்படிப் போயிட்டிருக்கு..?'' என்றபடி பாரதிராஜா சகஜ நிலைக்கு வந்தவுடன்தான் நிம்மதியானார் சேகர்.

– கலைத்தூதன்

# புரட்சிகரமான 'பெரியம்மா'



அம்மாவின் வருகை சந்தோஷத்தைத் தரவில்லை. அவளும் சந்தோஷமாக வரவில்லை. மத்தியான நேரம் அது. கோபி சோபாவில் சரிந்து, பேன் சுழலும் உத்திரத்தில் பார்வை வெறிக்க, சங்கரனைக் காணச் செல்வதைப் பற்றிய யோசனையில் இருந்தான். சங்கரன் சாப்பாட்டிற்குப் பிறகு சிறிது தூங்கி எழுகிற பழக்கம் உள்ளவன். கலைக்கலாகாது. எரிச்சல் வரும். ஏற்கெனவே தனக்கு உதவுவதில் அவனது ஆர்வம் குறைந்திருந்தது. ''நாணயம் வேணும் கோபி. பாரு, நான் சிபாரிசு பண்ணியும் உனக்குக் கடன் தர நம்ம ஆளுக யோசிக்கிறாங்க...'' நிறைய புலம்பி இருந்தான்.

''என் நேரம்ப்பா! யார் பணத்தையும் ஏமாத்தணும்னு நெனைக்கலை; ஆனா...''

''சரிடா. பொறு. இந்த ஒரு தடவை முயற்சி பண்ணிப் பார்க்கறேன்'' - சங்கரன் சொல்லியிருந்தான்.

மணி 3:30.

கண்கள் இலேசாகக் கிறங்க -

வாசலில் அம்மா, ''கோபீ...'' என்ற குரலுடன்.

''அம்மாவா...? என்ன இது திடீர்னு! வாம்மா'' கோபி ஆச்சரியத்தை வெளிப்படுத்தத் தடுமாற, ''வர்றேம்ப்பா'' என எதிரில் உட்கார்ந்தாள். துணிப் பையை மடியில் கிடத்திய படி, ''ஸ்ஸ் அப்பாடா'' என மூச்சு விட்டாள். கூர்ந்து பார்த்தாள்.

''என்னம்மா...?''

''நான் கேள்விப்பட்ட விஷயமெல்லாம் நெசமாய்யா?'' குரல் மெதுவாகவும், அந்தக் கேள்விக்கான பதிலைப் பெறவே வந்ததைப் போலவும் இருந்தது.

''என்னவாம்?''

''கடையை மூடிட்டியாம். ஏவாரம் பண்ணி ரெண்டு மாசம் ஆகுதுன்னு சொல்றாகளே அய்யா.''

கோபிக்கு வியர்த்தது. எங்கோ கிராமத்திலிருக்கும் இவளுக்கு எப்படித் தெரிந்தது?

''சொல்லுய்யா. நெசந்தானா?''

''......''

''என்ன கஷ்டம்? புள்ளை குட்டிகளை வச்சுக்கிட்டு என்ன பண்ணப் போறே?''

கோபி பதில் சொல்லவில்லை.

தனக்கே இன்னும் தெரியாத விஷயம். செட்டியார் கூட கையை விரித்து விட்டார்: ''முதல்லியே இருபது நிக்குது. இன்னும் வேணும்னா... ம்ஹூம்... தாங்காது கோபி...''

சங்கரனின் உதவியும் இல்லையென்றால்...

''என்ன பண்ணப் போறே?'' அம்மா கேட்டாள்.

நினைக்கவே பயமாக இருந்தது. தோளைத் தொடும் இரண்டு பெண்கள். ஒன்பதாம் கிளாஸ் பையன். மனைவி, வாடகை வீடு. சுமையாய் அழுத்தும் கடன்கள்...

''பெத்த மனசு தாங்கலை. ஓடி வர்றேன். சொல்லுய்யா...''



முகம் மட்டுமல்ல; அம்மாவின் தோற்றமும் பரிதாபமாக இருந்தது. வெளுத்த தலை. பஞ்சடைந்த கண்கள். சுருங்கி உலர்ந்த தேகம். நூல் சேலை. மெல்லிசாக நடுங்கும் குரல்.

என் கஷ்டம் என்னோடு. உனக்கு என்னம்மா?

முகத்தில் செயற்கையாகப் புன்னகையை வரவழைத்துக் கொண்டான். ''யாரம்மா சொன்னது?'' என்று கேட்டான்.

''அதைப் பத்தி என்ன! உண்மையா இல்லையா?''

''இல்லே. வந்து... நேரம் சரியில்லைன்னு நான்தான்.. கொஞ்ச நாள்ல நிறத்திருவோம்மா...'' தனக்கே நம்பிக்கை இல்லாத குரல்.

இனி நிமிரவே முடியாதா?

''என்ன புள்ளே போ! கையில காக புரள்றப்ப புடிக்க வைக்கத் தெரியாம இப்ப கஷ்டப்படறியே அய்யா. அஞ்சு பைசா குடுத்து உதவ ஆரு இருக்கா சொல்லு?'' தன்னைச் சுதாரித்துக் கொண்டாள். ''என்ன? என் ராசாத்திகளா! இளைச்சுப் போயிட்டீகளேடா'' என விசாரிக்கவும், துணிப் பையிலிருந்து எள்ளுருண்டை முறுக்கு வகைகளை எடுத்து வழங்கவும் கவனம் திரும்ப -

''சாப்ட்டு ரெஸ்ட் எடும்மா. நான் கொஞ்சம் வெளியே போய்ட்டு வர்றேன்'' என எழுந்தான் கோபி.

''ஜாக்கிரதைய்யா'' எனப் பழக்கப்பட்ட அம்மாவின் குரல், கனிவுடன் ஒலித்தது.

அம்மாவின் வருகை நிறைய பிரச்னைகளை உண்டாக்கும் என நினைத்தான் கோபி. சரிவைக் கண்டு நிலைகுலைந்து போவாள். பத்மாவைத் துளைத்து எடுத்து விடுவாள். ஏற்கெனவே துவண்டு கிடக்கும் பத்மாவுக்கு இதெல்லாம் அதிகம்.

- எவ்வோ கடன் இருக்கு?
- ஏன் கடையை எடுக்கும்படி ஆயிற்று?
- நகையெல்லாம் எங்கே?
- டீ.வி. பொட்டி ஸ்கூட்டர்ல்லாம் காணும்?

இதற்கெல்லாம் பத்மா என்ன பதில் சொல்ல முடியும்?

''பணத்தைப் பணம்னு மதிக்கணும். தன்னை மதிக்கிறவன்கிட்டதான் அது தங்கும். தெரிஞ்சுதா?'' அம்மா அடிக்கடி சொல்லுகிற வார்த்தைகள் ஞாபகத்திற்கு வந்தன.

அம்மா பணத்தின் அருமை தெரிந்தவள்.



அப்பா போன பிறகு வைராக்கியமாக அவனை வளர்த்து ஆளாக்கினாள். எருமைகளை வாங்கி, பால் கறந்து, தலைச் சுமையாய் மோர் விற்று, வரட்டி தட்டி விற்று...

கண்ணெதிரில் பார்த்து வளர்ந்தும் அதெல்லாம் ஏன் மனத்தில் பதியவில்லை?

அலட்சியம். எதிர்காலத்தை நினைக்கத் தெரியாத புத்தி. மேடு கடந்து வந்ததை மறந்தது... சம்சாரமாக வாய்த்தவளுமா இப்படி?

அம்மா முதல் மாதமே சரியாகச் சொன்னாள்.

''யப்பா! ஜாடிக்கு ஏற்ற மூடிய்யா; உன்னை விட செலவாளியா இருக்கா. பார்த்துப் பொழைக்கணும் ராசா...''

பத்மா ஒரு ரூபாய் காரியத்திற்கு இரண்டு ரூபாய் கேட்கிறவள்.



''கட்சித் தலைவரைப் புகழ வேண்டியதுதான். அதுக்காக இப்படியா ஓவராகப் புகழறது?''

''என்ன சொல்றீங்க?''

''ஷேக்ஸ்பியருக்கு ஆ ங் கி ல அறிவை ஊட்டியவர்னு அந்தக் கட்சித் தலைவரைப் புகழறாங்களே!''

- எஸ். முகம்மது யூசுப்

அம்மாவுக்கும் அவளுக்கும் ஒத்துக் கொள்ளவில்லை. சில்லறைச் சண்டைகள். பூசல். புதுப் பெண்சாதி முகம் சுளிப்பதையும், இரவில் திரும்பிப் படுப்பதையும் சகிக்க முடியாமல் ஒருநாள் சத்தம் போட,

அம்மா கிராமத்திற்குப் போய் விட்டாள். அதே மாட்டுத் தொழுவம், வரட்டி, மோர் வியாபாரம்.

எப்போதோ ஒரு தடவை வந்து போவாள். ஐம்பது, நூறு அனுப்பும் போது பெற்றுக் கொள்வாள். சௌக்கியம் அறிய பதினைந்து காசில் கடுதாசு எழுதுவாள்.

தனது வீழ்ச்சிக்கு என்ன காரணம்? அம்மாவைப் போன்ற கண்டிப்பு இல்லாததா? நிர்வாகம் தெரியவில்லையா? சிக்கனம் தெரியாதவனின் நிறுவனம் நாசம் தானா?

**ச**ங்கரன் வீட்டிலிருந்தான். அவனைக் கண்டு தலையை மட்டும் அசைத்து வரவேற்றான். உள்ளே பேச்சுக் குரலில், சிரிப்பில் உறவினர்கள் வந்திருப்பது தெரிந்தது.

கோபிக்குச் சட்டென்று தனது விஷயத்தை ஆரம்பிக்க முடியவில்லை. ''வீட்ல விருந்தாளிக வந்திருக்காங்க போல இருக்கு?'' எனத் துவங்கினான்.

''ம்....''

''பிரண்டு ஒருத்தன் பைனான்ஸ் பண்றான். கேட்டுப் பார்க்கிறேன்னியே... அதான் தெரிஞ்சுட்டுப் போகலாம்னு...'' தயங்கித் தயங்கிக் கேட்டான்.

''போன்ல அவனைப் பிடிக்க முடியலை. நேர்லதான் போகணும். போறேன்'' என்றான் சங்கரன்.

''உங்கிட்டச் சொல்றதுக்கு என்ன... இருபதாச்சும் கிடைச்சாத்தான் கடையைத் திறக்க முடியும். கொஞ்சம் முயற்சி பண்ணிப் பாரு சங்கரன்.''

''அதான் பார்க்கலாம்னு சொல்றன்ல. அப்புறம் என்னடா.''

சிநேகிதனின் முகத்தில் சலிப்பா, எரிச்சலா என்று தெரியவில்லை. உதவி எனக் கையேந்தும் போது எல்லா உறவுகளும் இப்படித்தான் ஆகி விடுகின்றன.

விவரிக்க முடியாத மௌனம் கொஞ்ச நேரத்திற்கு இருந்தது.

விலகிச் செல்லும் சிநேகிதர்களின் முகங்கள் ஒவ்வொன்றாக ஞாபகத்திற்கு வர...

கோபி விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தான். நம்பிக்கை இலேசாக ஆட்டம் கொடுக்க, மனம் தடுமாறத் தொடங்கியது. ஒருவேளை சங்கரனும் கையை விரித்து விட்டால்?

''இனி என்ன செய்யப் போறே?'' அம்மாவின் கேள்வி முழு வீரியத்துடன் கொட்டியது.

**வீ**டு திரும்பும் போது இருட்டி விட்டது.

வாசலிலேயே காத்திருந்த அம்மா, ''ஏய்யா இவ்ளோ நேரம்?'' என எழுந்து நின்றாள்.

''நீங்கல்லாம் சாப்பிட்டாச்சாம்மா?''

''ஆச்சய்யா.''

பத்மா அம்மா கொண்டு வந்த பலகாரங்களைத் தட்டில் வைத்துக் கொடுத்தாள். அம்மாவின் அதே கைப்பதம் - ஏதோ பழைய நாளின் ஒரு பண்டிகையை ஞாபகப்படுத்துவதைப் போல.

''போன காரியம் ஜெயமாய்யா?''

''இல்லம்மா. இனிமேல்தான் தெரியும்.''

''அம்மா பெருமூச்சு விட்டாள். கொஞ் சம் தயங்கி, ''பண விஷயமா?'' என்று கேட்டாள்.

''ஆமாம்'' கோபி தலையசைத்தான்.

''ஒருத்தன் காக இன்னொருத்தன்கிட்ட வர்றது சாமான்யமா? எவ்ளோ?''

''.........''

''சொல்லுய்யா. ஒரு நாலு. அஞ்சு தேவைப்படுமா?'' அந்த எளிய மனுஷியால் அவ்வளவுதான் கற்பனை செய்து கொள்ள முடிந்தது. அவளை ஏமாற்ற விரும்பாமல், ''அவ்ளோதான்'' என்றான் கோபி.

''அது இருந்தா கடையைத் திறந்துர லாமா?''

''ம்....''

''நொந்தாளே? கவலையை விடு. நான் தர்றேன். நீ மத்த ஏற்பாடுகளைக் கவனி.''

அம்மா திடீரென உற்சாகமடைந்தாள். தான் என்னவோ என்று பெரியதாக நினைத் திருந்த ஒன்று எளிதாகி விட்ட மாதிரி இருந் தது அவளுக்கு.

''ஏதும்மா உன்கிட்ட அவ்ளோ பணம்?''

''பணமா இல்லை, கறவை மாடு மூணு இருக்குல்ல... வித்துக் கொண்டு வர்றேன்.''

''அம்மா...''

''பேசாம இரு. கஷ்டத்துக்கு உதவாம அதெல்லாம் எதுக்கு? இதெல்லாம் ஒரு பாடம். இனிமேலாச்சும் கருத்தாப் பொழைக்கணும் பணத்தை மதிக்கப் பாரு. உன் உழைப்புக்கு அது உன்கிட்ட சேருதா இல்லையான்னு...''

அவள் சொன்ன தோரணையில், முக பாவனையில், மனம் கரைந்து இலகுவாகி விட்ட மாதிரி இருந்தது கோபிக்கு. இது தெரியாமல் வாழ்ந்துதானே சிரமித்து, சிறுமைப்பட்டு... குழந்தையாகி அவளது மடியில் தலைசாய்த்துக் கொள்ள ஆசையா யிருந்தது.

அம்மா அடுத்த நாளே ஊருக்குப் புறப் பட்டுப் போனாள். அவள் படி இறங்கும் வரை காத்திருந்த பத்மா, ''இந்தப் பணம் எதுக்கு... நம்ம தேவைக்குக் கால்வாசி கூட போதாது. இனி அந்தம்மா பெருமை அடிச் சுக்கும். என்னமோ முழு முதலையும் தானே குடுத்த மாதிரி...'' என்றாள்.

''முழு முதல்தாண்டி இது. பணம் கால்வாசி, நம்பிக்கையும், புத்திமதியும் முக்கால்வாசி'' என்றான் கோபி.

அதைச் சொல்லும் போது அவனது கண்கள் பனித்தன.

# வாடகைக் 'குடும்பம்'



வீட்டுக் கதவு தட்டப்படும். வயதான மூதாட்டி விரைந்து சென்று திறப்பார். "என்ன அம்மா! அப்பா! எப்படியிருக்கீங்க?" என்றவாறு இளம் தம்பதி உள்ளே நுழைவார்கள். அவர்களுடன் கைக் குழந்தை. பாட்டியும் தாத்தாவும் பேரப் பிள்ளையைக் கொஞ்சி மகிழ்ந்து, மகனையும் மருமகளையும் உபசரித்து பூரித்து... குடும்பம் நீண்ட நாட்களுக்குப் பிறகு ஒன்று சேர்ந்ததில் மகிழ்ச்சி வெள்ளம் பெருகும்.

ஆனால்... பெற்றோரைத் தேடி வந்த இளம் தம்பதியர் முதியவர்களின் சொந்தக் குழந்தைகள் அல்ல; அவர்கள் சிறந்த நடிகர்கள். தாய் தந்தையரை மகிழ்விக்க என உண்மை மகன் 'வாடகைக்கு எடுத்து' அனுப்பியவர்கள்!

ஜப்பானில் கம்ப்யூட்டர் விற்பனையாளரான முப்பத்தைந்து வயது நிஜ மகனுக்குப் பெற்றோரைச் சென்று பார்க்கக் கூட நேரமில்லை. அதனால் 150,000 யென் (1150 டாலர்) செலுத்தி ஒரு குடும்பத்தை மூன்று மணி நேரத்துக்கு வாடகைக்கு எடுத்து அனுப்புகிறார்!

இரண்டாம் உலக யுத்தத்துக்குப் பின் ஜப்பானியர்கள் அயராது உழைத்து முன்னேறியுள்ளனர். இந்த முனைப்பின் வேகத்தில் மனித நேயத்துக்கு 'டாடா' சொல்ல வேண்டி வந்து விட்டது. வயதான பெற்றோருடன் செலவிட பலருக்கு நேரமில்லை. இந்த இயலாமையையே சாதகமாக்கிக் கொண்டு வியாபாரம் நடத்துகிறது Japan Efficiency Headquarters என்ற நிறுவனம். இது வரை சுமார் எண்பது முதியோருக்கு 'வாடகைக் குடும்பங்களை' அனுப்பி வைத்துள்ளது. இன்னும் எண்பது குடும்பங்களுக்கு 'வெயிட்டிங் லிஸ்ட்' தயார்.

வாடகைக் குழந்தைகள் எனத் தெரிந்தும் அவர்களை அன்புடன் வரவேற்று, சொந்தக் குழந்தைகளாக பாவிக்க ஜப்பானிய முதியோர் தயாராய் உள்ளனர் எனில் அவர்களைத் தனிமை எந்த அளவுக்கு வாட்டிக் கொண்டிருக்க வேண்டும்!

ஆதாரம் : டைம்ஸ் ஆஃப் இந்தியா

நா. ரா. மணி

## பாட்டிலில் இளநீர் :

இளநீரை பாட்டிலில் அடைத்து ஏற்றுமதி செய்யும் யோசனை உதித்துள்ளது கேரளாவில்.. தேங்காயை ஆதாரமாகக் கொண்ட ஏற்றுமதித் தொழிலில் நிறைய அந்நியச் செலாவணி ஈட்ட வழி இருக்கிறது என உணர்ந்துள்ளது கேரள கூட்டுறவுத் துறை.

இந்தியாவிலேயே கூட்டுறவுத் துறை மிக வெற்றிகரமாகச் செயல்படும் மாநிலம் கேரளாதான். எழுபத்தைந்து ஆண்டுகளாக இங்கே கூட்டுறவு இயக்கம் வேரூன்றியிருக்கிறது. நூறு சதவிகித எழுத்தறிவின் பலன் கூட்டுறவுத் துறையில் பிரதிபலிக்கிறது.

"கூட்டுறவில் முழு ஈடுபாடு, செயல்பாட்டுத்திறன், பொறுப்பேற்கும் குணம் - இவை கேரள கூட்டுறவு இயக்கத்தில் ஈடுபட்டுள்ளவர்களுக்குத் தாராளமாக இருக்கின்றன" என்கிறார் கேரள மாநில கூட்டுறவுத் துறைப் பதிவாளர் வி. எஸ். செந்தில்.

பிற வங்கிகள் நடத்தும் மியூசுவல் ஃபண்டுகள் போன்றவற்றைக் கேரள கூட்டுறவு வங்கிகளும் நடத்த வழிவகைகள் ஆராயப்பட்டு வருகின்றன. தொழில் முதலீட்டுத் துறையிலும் வணிகத் துறையிலும் பங்கு ஏற்றுக் கொள்ளும் அளவுக்குக் கேரள கூட்டுறவு இயக்கம் வளர்ந்திருக்கிறது. இதனால் அந்நியச் செலாவணி கையாளும் உரிமை விரைவில் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அயல்நாடுகளில் வாழும் ஆயிரக்கணக்கான கேரள மக்களின் மூலம் அன்னியச் செலாவணி வரவைப் பெருக்க வழி பிறக்கும் என்று நம்பிக்கையோடு சொல்கிறார் செந்தில்.



ஆதாரம் : எகனாமிக் டைம்ஸ்

தொகுப்பு : எஸ். வி. என்.




# தழைக்கும் திரை நாயகம்

வித்தியாசம் அதிகமில்லை.
ஒன்று
திரையில் நடக்கிறது
மற்றொன்று
திரை மறைவில் நடக்கிறது.

இரண்டுமே
நார்களை
வேர்கள் என்று
நம்ப வைக்கும் நாடகங்கள்.

நாய்க் குடைகளை
வெண்கொற்றக் குடைகள் எனப்
பிரசாரம் செய்யும்
வியாபார விளம்பரங்கள்.

திரைப்படம் -
இருளில் நடக்கிறது
அரசியல் -
இருளை விதைக்கிறது.

அரசியலில்
திரைப்படத்தைப் போலவே
திடீர்த் திருப்பங்கள்.
திரைப்படத்தில்
அரசியலைப் போலவே
அடிதடிகள்... அலங்கோலங்கள்...
திரைப்படம் -
கலாசாரத்தைக்
காவு கொடுக்கிறது.
அரசியல் -
எதிர்காலத்தைக்
காவு கொடுக்கிறது.

ரசிகர் மன்றங்கள்
அரசியல் கட்சிகளாகிவிட்டன.
கட்சிகள்
ரசிகர் மன்றங்களை
ஆரம்பிக்கின்றன.

க்யூ மனிதர்கள்,
கொடிகள், தோரணங்கள்
'வாழ்க... ஒழிக...'
இவை யாவும்
இரண்டுக்கும் பொதுவானவை.

திரைப்படம்
நாட்டின்
ஜீவாதாரப் பிரச்னை
ஆகிவிட்டது.
அரசியலோ
பொழுதுபோக்கு
அம்சமாகி விட்டது.

விளைவு -
ஜனநாயகம் செத்துவிட்டது.
சக்கைப் போடு போடுகிறது
திரை நாயகம்.



பிருந்தா சாரதி

# சிவகாமியின் சபதம்

## இருபதாம் அத்தியாயம்
## நிலவில் நண்பர்கள்

வானக் கடலில் மிதந்த பூரண சந்திரன் பால் நிலவைப் பொழிந்து இந்த மண்ணுலகத்தை மோகனப் பொன்னுலகமாகச் செய்து கொண்டிருந்த இரவில் வடபெண்ணை நதியானது அற்புதக் காட்சியை அளித்துக் கொண்டிருந்தது.

முதல் நாளிரவு அதே நேரத்தில் இந்த நதியைப் பார்த்திருந்தோமானால், சலசல வென்று இனிய ஓசையோடு அம் மாநதியில் ஓடிய தண்ணீர்ப் பிரவாகம் உருக்கிய வெள்ளியைப் போல் தகதகவென்று பிரகாசிப்பதையும், நாலாபுறமும் ககனவட்டம் பூமியைத் தொட்டு ஒன்றாகும் வரம்பு வரையில் பூரண அமைதி குடிகொண்டிருப்பதையும் கண்டிருப்போம். அந்த இயற்கை அழகுக் காட்சியின் இன்பத்தில் மெய்மறந்திருப்போம். பிரவாகத்தையொட்டி விரிந்து பரந்து கிடக்கும் வெண் மணலிலே படுத்துக் கொண்டு "ஆகா! இது என்ன அற்புத உலகம்? இவ்வுலகத்திலே ஒருவன் அடையக் கூடிய ஆனந்தம் சொர்க்கலோகத்திலே தான் கிடைக்குமா?" என்று வியந்திருப்போம்.

ஆனால், இன்றிரவோ அந்த வடபெண்ணை நதித் துறையானது மகத்தான அல்லோலகல்லோலத்துக்கு உள்ளாகியிருந்தது. கணக்கற்ற யானைகளும், குதிரைகளும், ரதங்களும், வண்டிகளும் அந்த நதியை அப்போது கடந்து கொண்டிருந்தன. யானைகள் அணிந்திருந்த தங்க முகபடாங்களும், அவற்றின் தந்தங்களுக்கு அணிந்திருந்த வெள்ளிப் பூண்களும், இயற்கையிலேயே அழகுடைய புரவிகளுக்குப் பூட்டியிருந்த நானாவித ஆபரணங்களும், ரதங்களின் தங்கத் தகடு வேய்ந்த விமானங்களும் வெண்ணிலவில் பளபளவென்று ஜொலித்தன.

யானைகள், குதிரைகள் எல்லாம் வரிசை வரிசையாக ஏககாலத்தில் நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் நதியை அடைத்துக் கொண்டு நீர்ப்பிரவாகத்தைக் கடந்த போது ஏற்பட்ட ஓசை பெருங் காற்று அடிக்கும் போது அலைவீசிக் குமுறும் சமுத்திரத்தின் பேரிரைச்சலை ஒத்திருந்தது.

அக்கரையில் கண்ணுக்கெட்டிய மட்டும் காலாட் படையைச் சேர்ந்த வீரர்கள் காணப்பட்டனர். அவர்களுடைய கையிலே பிடித்திருந்த கூரிய வேல்கள் அசைந்த போதெல்லாம் மின்வெட்டின் ஒளி தோன்றிக் கண்ணைப் பறித்தது. அந்த வீரர் கூட்டத்துக்கு இடையிடையே ஆயிரக்கணக்கான ரிஷபக் கொடிகள் இளங்காற்றில் பறந்து படபடவென்று சப்தித்துக் கொண்டிருந்தன.

இந்தக் கரையில் நதித் துறைக்குச் சற்றுத் தூரத்தில் ஒரே ஒரு கூடாரம் மட்டும் காணப்பட்டது.

கூடாரத்துக்குப் பக்கத்தில் புல்தரையில் விரித்திருந்த ரத்தினக் கம்பளத்தின் மேல் யாரோ நாலு பேர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கையைத் தட்டிக் கூப்பிட்டால் கேட்கக்கூடிய தூரத்தில் பத்துப் பன்னிரண்டு வீரர்கள் கையில் நீண்ட வேல்களுடனும், இடையில் செருகிய வாள்களுடனும் சர்வ ஜாக்கிரதையுடன் காவல் புரிந்து கொண்டிருந்தார்கள். இதிலிருந்து ரத்தினக் கம்பளத்தில் உட்கார்ந்திருப்பவர்கள் பெரிய அந்தஸ்து படைத்த முக்கியஸ்தர்கள் என்று ஊகிக்கலாம்.

அருகில் சென்று பார்த்தோமானால், நமது ஊகம் உண்மை என்பதைக் காண்போம். அந்த நால்வரும் மாமல்ல சக்கரவர்த்தி, சேனாபதி பரஞ்சோதி, வேங்கி அரசன் ஆதித்த வர்மன், ஒற்றர் தலைவன் சத்ருக்னன் ஆகியவர்கள்தான்.

**வே**ங்கி அரசன் ஆதித்தவர்மன் மாமல்லருடைய தாயாதி சகோதரன். அதாவது சிம்ம விஷ்ணு மகாராஜாவின் சகோதரன் வம்சத்தில் வந்தவன். இந்த வம்சத்தினர் வேங்கி சாம்ராஜ்யத்தின் வடபகுதியில் கோதாவரிக்கு அப்பாலுள்ள பிரதேசத்தைச் சுதந்திரச் சிற்றரசர்களாக ஆண்டு வந்தார்கள்.

சளுக்க சக்கரவர்த்தி காஞ்சியின் மீது படையெடுத்து வந்த போது, ஆதித்த வர்மன் பல்லவ சக்கரவர்த்தியின் உதவிக்கு வர முடியாதபடி இடையில் புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனனால் வழிமறிக்கப் பட்டான். விஷ்ணுவர்த்தனன் வேங்கியின் புராதன இராஜவம்சத்தை நிர்மூலம் செய்து தான் சிம்மாசனம் ஏறியதும், ஆனால், புலிகேசி தென்னாட்டிலிருந்து வாதாபிக்குத் திரும்பி வருவதற்குள் விஷ்ணுவர்த்தனன் உயிர் துறக்க நேர்ந்ததும் நேயர்கள் அறிந்தவை.

விஷ்ணுவர்த்தனனுடைய ஆட்சியையும் ஆயுளையும் அகாலத்தில் முடிவு செய்யக் காரணமாயிருந்தவன் ஆதித்த வர்மன்தான்.

ஆனால், சில வருஷத்துக்குப் பின்னர் மீண்டும் புலிகேசியின் பெருஞ் சைனியம் வேங்கியைக் கைப்பற்ற வந்த போது, ஆதித்தவர்மன் தன்னுடன் மிச்சம் இருந்த வேங்கிச் சைனியத்துடனே தென் திசை நோக்கிப் பின்வாங்கி மீண்டும் தாக்கச் சந்தர்ப்பத்தை நோக்கிக் காத்திருந்தான்.

மாமல்லர் மாபெருஞ் சைனியத்தோடு வாதாபியின் பேரில் படையெடுத்த போது, ஆதித்தவர்மனும் அவரோடு சேர்ந்து போருக்குப் புறப்பட்டான்.

**சே**னாபதி பரஞ்சோதி, பன்னிரண்டு வருஷத்துக்கு முன்னால் தாம் இதே வட பெண்ணையின் அக்கரையில் புலிகேசியின் சேனா சமுத்திரத்தைப் பார்த்துப் பிரமிப் படைந்தது பற்றியும், மகேந்திர பல்லவர் மாறுவேடம் பூண்டு தன்னைப் பின் தொடர்ந்து வந்து புலிகேசியின் கண்ணெதிரே தன்னை விடுதலை செய்தது பற்றியும் விவரமாகச் சொல்லிக் கொண்டிருந்தார்.

மற்ற மூவரும் அதிசயத்தோடு கேட்டுக் கொண்டிருந்தனர். மூவரிலும் ஆதித்த வர்மன் மிகவும் அதிசயப்பட்டான். அவனுக்கு அந்த விவரங்கள் எல்லாம் புதியனவாக இருந்தன.

''ஆகா! அந்த விசித்திர சித்தரை நேரில் பார்க்கும் பாக்கியம் இந்தக் கண்களுக்குக் கொடுத்து வைக்கவில்லையே?'' என்று வருந்தினான்.

அப்போது மாமல்லர் சொன்னார் :

''இலங்கை இளவரசன் கூட அடிக்கடி இவ்விதம் கூறி வருத்தப்படுவான். என் தந்தை என்பதற்காக நான் பெருமையடித்துக் கொள்ளவில்லை. ஆனாலும் அவரைப் பார்ப்பதே ஒரு பாக்கியந்தான். அவருடன் நெருங்கிப் பழகுவதற்கோ பல ஜன்மங்களிலே பாக்கியம் செய்திருக்க வேண்டும். மூன்று வருஷ காலம் அவர் என்னை அழைத்துக் கொண்டு தென் தேசமெங்கும் யாத்திரை செய்தார். இந்த மாதிரி வெண்ணிலவு பொழிந்த இரவுகளிலே நானும் அவரும் வெட்ட வெளியில் உட்கார்ந்து ஆனந்தமாகக் காலம் கழித்திருக்கிறோம். அவர் பிரயாணம் கிளம்பும் போது பரிவாதினி வீணையையும் உடன் எடுத்து வருவார். வீணைத் தந்திகளை மீட்டி அவர் இசை வெள்ளத்தைப் பெருக்கும் போது, வானமும் பூமியும் நிசப்தமாய், நிச்சலனமாய் நின்று கேட்பது போலத் தோன்றும். அந்த நாத வெள்ளத்தைத் தடைசெய்யப் பயந்து காற்றும் நின்று விடும். மரங்களின் இலைகள் அசைய மாட்டா. பட்சி ஜாலங்களும் மௌனவிரதம் பூண்டிருக்கும்.''

''அண்ணா நிறுத்துங்கள்! இப்படி நீங்கள் பேச ஆரம்பித்தால் எனக்குச் சித்தம் கலங்கி விடுகிறது. யுத்தமும் இரத்தக் களரியும் என்னத்திற்கு, - வீணை வாசிக்கக் கற்றுக் கொண்டு வாழ்க்கையை ஆனந்தமாகக் கழித்து விட்டுப் போகலாமென்று தோன்றி விடுகிறது!'' என்றான் ஆதித்த வர்மன்.

**மா**மல்லர் கலகலவென்று சிரித்து விட்டுச் சொன்னார் : ''மகேந்திர பல்லவர் இதே மாதிரி வார்த்தைகளை ஒரு காலத்தில் சொன்னதுண்டு. 'உலகத்தில் மன்னர் குலத்தில் பிறந்தவர்களுக்கு மண்ணாசை என்பது போய் விட்டால் இந்த பூவுலகமே சொர்க்கமாகி விடும்!' என்று சொல்வார். உலகத்தில் யுத்தம் என்பதே உதவாது. வேல், வாள் முதலிய போர்க் கருவிகளையே யாரும் செய்யக் கூடாது. கொல்லர் உலைகளிலே பூமியை உழுவதற்கு ஏர்க் கொழுக்களும் சிற்பக் கலைஞர்களுக்கு வேண்டிய

அமரர் **கல்கி**

சிற்றுளிகளுந்தான் செய்யப்பட வேண்டும்' என்று என் தந்தை அடிக்கடி கூறுவார். ஆனால், என்றைய தினம் சளுக்கர் பல்லவ நாட்டின் மீது படையெடுத்ததாகச் செய்தி வந்ததோ, அன்றைய தினமே அவருடைய மனம் அடியோடு மாறி விட்டது. ஆயிரம் சிற்பிகள், பதினாயிரம் சித்திரக்காரர்களைக் காட்டிலும் மதயானை மீது வேல் எறிந்த இளைஞன் அவருடைய மனத்தை அதிகமாகக் கவர்ந்து விட்டான்...!'' என்று கூறிவிட்டு மாமல்லர் சேனாபதி பரஞ்சோதியைப் பார்த்துப் புன்னகை புரிந்தார்.

''நமது சேனாபதி காஞ்சி நகரில் பிரவேசித்த அன்று நடந்த சம்பவத்தைத் தானே குறிப்பிடுகிறீர்கள்? அதைப் பற்றி ஒருநாள் அவரிடம் நானே விவரமாகக் கேட்க வேண்டுமென்றிருந்தேன்'' என்று கூறினான் ஆதித்தவர்மன்.

''என் தந்தையின் அபிமானத்தை நமது சேனாபதி கவர்ந்தது போல் வேறு யாரும் கவர்ந்ததில்லை. ஒவ்வொரு சமயம் எனக்கு அவர் மேல் பொறாமை கூட உண்டாயிற்று. மகேந்திர பல்லவர் என்னைப் புறக்கணித்து விட்டுச் சேனாபதிக்கே முடிசூட்டி விடுவாரோ என்று கூடச் சில சமயம் சந்தேகித்தேன். ஆனால், அதற்கு நானும் ஆயத்தமாயிருந்தேன். இன்றைக்குக் கூடச் சேனாபதி ஒப்புக் கொண்டால்...'' என்று மாமல்லர் சொல்லி வந்த போது தளபதி பரஞ்சோதி குறுக்கிட்டார்.

''பிரபு! இப்படியெல்லாம் பேச வேண்டாம். சாம்ராஜ்யம், சிம்மாசனம் எல்லாம் எனக்கு என்னத்திற்கு? பட்டிக்காட்டில் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன் நான். என் தாயாரிடம், 'கல்வி பயின்று வருகிறேன்' என்று வாக்குக் கொடுத்து விட்டுக் காஞ்சிக்கு வந்தேன். பன்னிரண்டு வருஷத்துக்கு மேல் ஆகியும் அந்த வாக்கை நிறைவேற்றியபாடில்லை. இன்னும் நிரட்சர குட்சியாகத்தான் இருக்கிறேன். இந்த யுத்தம் முடிந்ததும் என் தாயாருக்கு நான் கொடுத்த வாக்கை நிறைவேற்றப் போகிறேன். சிம்மாசனத்தை யாருக்காவது கொடுத்துத்தான் ஆக வேண்டும் என்றால் இலங்கையிலிருந்து ஒருவர் வந்து காத்துக் கொண்டிருக்கிறாரே அவருக்குக் கொடுங்கள்!'' என்றார்.

மாமல்லர் உடனே ஆதித்தவர்மனையும், சத்ருக்னனையும் பார்த்துக் கண்ணினால் சமிக்ஞை செய்ய, அவர்களும் விஷயம் தெரிந்து கொண்டதற்கு அடையாளமாகப் புன்னகை புரிந்தார்கள்.

மாமல்லர் மானவன்மனிடம் அதிகப் பிரியம் வைத்திருக்கிறார் என்னும் விஷயம் சேனாபதி பரஞ்சோதியின் மனத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது. இதை மாமல்லர் நன்கு அறிந்திருந்தார். வாதாபி யுத்தத்துக்கு மானவன்மனை வர வேண்டாமென்று காஞ்சியில் நிறுத்தி விட்டு வந்ததற்கே இதுதான் முக்கியமான காரணம்.

எனவே மாமல்லர் மற்ற இருவரையும் பார்த்து, ''பார்த்தீர்களா, நான் சொன்னது சரியாய்ப் போயிற்று'' என்று சொல்வதற்கு அறிகுறியாகச் சமிக்ஞை செய்து விட்டு, தலைகுனிந்தவண்ணமிருந்த பரஞ்சோதியைப் பார்த்து ''அழகாய்த்தானிருக்கிறது! போயும் போயும் அந்த மூடனிடமா மகேந்திர பல்லவர் ஆண்ட ராஜ்யத்தை ஒப்புவிக்கச் சொல்கிறீர்? அவனை நான் வர வேண்டாம் என்று கண்டிப்பாகச் சொல்லியிருந்தும் அவன் பாட்டுக்குப் புறப்பட்டு வருகிறான். அவனுக்கு என்ன தண்டனை கொடுக்கலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன். எனக்கு அவன் மேல் வரும் கோபத்துக்கு அளவேயில்லை. இலங்கைக்கே திருப்பி விரட்டி விடலாமா என்று தோன்றுகிறது. சேனாபதி உம்முடைய அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டார்.

சேனாபதி சற்று யோசனை செய்து விட்டு, ''போர்க்களத்துக்கு வரவேண்டுமென்று அவ்வளவு ஆவல் உள்ளவரை எதற்காகத் தடுக்க வேண்டும்? மானவர்மர் வந்தால் நல்லதுதான்; நமது யானைப் படைக்கு அவர் தலைமை வகித்தால் எவ்வளவோ நன்றாக இருக்கும்'' என்று சொன்னார்.

''எனக்கு என்னவோ சுத்தமாய்ப் பிடிக்கவில்லை. மானவன்மன் நம்முடைய உதவியைக் கோரி வந்து அடைக்கலம் புகுந்தவன். இப்போது அவனுடைய உதவியினால் நாம் ஜயித்தோம் என்று எதற்காக ஏற்பட வேண்டும்?.....'' என்றார் மாமல்லர்.

அதுவரை ஏறக்குறைய மௌனமாயிருந்த சத்ருக்னன் கூறினான் :

''சக்கரவர்த்தி! தாங்கள் அவ்விதம் எண்ணவே கூடாது. இந்த யுத்தத்தில் ஜயிப்பதற்குத் தங்களுக்கு யாருடைய ஒத்தாசையும் தேவையில்லை. தங்களிடம் இல்லாத போர்த்திறமை வேறு யாரிடம் இருக்கிறது? சேனாபதியும் ஆதித்தவர்மரும் இல்லாவிட்டாலும் தாங்கள் வாதாபியை அழித்து விட்டு வெற்றி வீரராய்த் திரும்புவீர்கள். இந்தப் படையெடுப்பில் கலந்து கொள்வதற்குக் கொடுத்து வைத்தவர்கள் பாக்கியசாலிகள். மானவன்மர் இந்தப் படையெடுப்பிலே கலந்து கொண்டால் அவரால்தான் தாங்கள் ஜயமடைந்தீர்கள் என்ற பெயர் ஒருநாளும் ஏற்பட்டு விடாது. அதனால் அவருக்குக் கௌரவம் ஏற்படும் என்பதுதான் உண்மை.''



சத்ருக்னன் கூறியதைச் சேனாபதி, ஆதித்தவர்மன் இருவரும் பூரணமாக ஆமோதித்தார்கள்.

'மேலும், நமது யானைப் படைக்குப் பயிற்சி அளிக்கும் காரியத்தில் மானவன்மர் மிக்க சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார். அவரைப் போருக்கு வர வேண்டாம் என்று சொல்வது நியாயமல்ல'' என்றார் சேனாபதி.

யானைப் படைக்கு ஏதோ புதுவிதமான பயிற்சி இலங்கை இளவரசன் அளித்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். அது என்ன புதுப் பயிற்சி?'' என்று ஆதித்த வர்மன் கேட்டான்.

''அது உண்மைதான். முன்னெல்லாம் கோட்டை வாசல் கதவுகளை உடைப்பதற்கு யானைகளை முட்ட விடுவது வழக்கம். காஞ்சிக் கோட்டை முற்றுகையின் போது மகேந்திர பல்லவரின் முன் யோசனையினால் அந்தப் பழைய முறை பலிக்காமல் போயிற்று. கோட்டைக் கதவுகளிலே கூட்டி முனைகளைப் பொருத்தியிருந்தபடியால், ஒரு தடவை மோதியதுமே யானைகள் வெறி கொண்டு திரும்பி ஓடிப் போயின. இப்போது மானவன்மர் நமது யானைகளுக்கு, இரும்பு உலக்கைகளால் கதவுகளைப் பிளக்கவும், கோட்டைச் சுவர்களைக் கடப்பாறைகளைக் கொண்டு இடிக்கவும், தீவர்த்திப் பந்தங்களைத் தூக்கி வீசிக் கோட்டைக்குள் எறியவும் கற்பித்திருக்கிறார்.''

''ஆஹா, இதுவரை இம்மாதிரி யானைப் படையை உபயோகித்ததாக நான் கேட்டதே இல்லை!'' என்றான் ஆதித்த வர்மன்.

சேனாபதி பரஞ்சோதிக்கு மானவன்மரிடம் தனிப்பட்ட முறையில் விரோதம் எதுவும் கிடையாது. அவரிடம் மாமல்லர் அதிக அன்பு வைத்திருக்கிறார் என்பதிலேதான் அதிருப்தி. எனவே, இப்போது மாமல்லர் அவரைப் பற்றி அலட்சியமாகப் பேசியதும், இவரே மானவன்மருடைய கட்சி பேச ஆரம்பித்தார்.

''ஆகையினால்தான் மானவன்மரைத் திருப்பி அனுப்புவது நியாயமல்லவென்று நான் சொல்லுகிறேன். யானைப் படைக்கு இப்பேர்ப்பட்ட புதிய பயிற்சி அளித்து ஆயத்தப்படுத்தியவருக்கு, அந்த யானைப் படை யுத்தத்தில் தானும் கலந்து கொள்ள வேண்டுமென்று ஆசையாயிராதா?'' என்றார் சேனாபதி பரஞ்சோதி.

இந்தச் சமயத்தில், அவர்கள் பேசிக் கொண்டிருந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்தில் இருந்த பிரம்மாண்டமான அரச விருட்சத்தில் ஒரு பெரிய சலசலப்பு ஏற்பட்டது. அந்த மரத்தின் அடர்த்தியான கிளைகளில் இரவு நேரத்தைக் கழிப்பதற்கென்று அடைக்கலம் புகுந்திருந்த ஆயிரக்கணக்கான பறவைகள் சடசடவென்று இறகுகளை அடித்துக் கொண்டும் பற்பல சுருதி - ஸ்வரங்களில் கூச்சலிட்டுக் கொண்டும் மரத்திலிருந்து வெளிவந்து வட்டமிட்டு மறுபடியும் கிளைகளுக்குள் புகுந்து, ஆரவாரம் செய்தன.

''அந்த மரத்துக்குத் திடீரென்று என்ன வந்து விட்டது? மரம் ஏறக்கூடிய காட்டு மிருகம் ஏதாவது அதில் ஏறி விட்டதா? பறவைகள் இப்படி அலறுகின்றனவே!''

என்று மாமல்லர் கேட்டதற்கு, அந்தத் திசையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த சத்ருக்னன், ''பிரபு! காட்டு மிருகம் எதுவும் அந்த மரத்தில் ஏறவில்லை, வீட்டு மிருகம் - இரண்டு கால் மிருகம் ஒன்று அந்த மரத்திலிருந்து இறங்கிக் கொண்டிருக் கிறது!'' என்றான்.

உடனே அவன் கையை ஓங்கித் தட்ட சற்றுத் தூரத்தில் ஆயுதபாணிகளாகக் காவல் புரிந்த வீரர்களில் ஒருவன் அவர்கள் இருந்த இடத்துக்கு விரைந்து ஓடி வந்தான்.

''அதோ பார்! அந்த அரச மரத்திலிருந்து யாரோ ஒருவன் கீழே இறங்கிக் கொண் டிருக்கிறான். அவனைப் பிடித்துக் கொண்டு வாருங்கள்!'' என்று சத்ருக்னன் கட்டளை யிட்டான்.

அவ்விதமே மேற்படி வீரர்கள் விரைந்து அரச மரத்தை நோக்கிச் சென்று, அதிலிருந்து கீழே இறங்கியவனைக் கைப் பிடியாய்ப் பிடித்துக் கொண்டு வந்தார்கள்.

வீரர் தலைவன், ''பிரபு! இதோ வாதாபி ஒற்றன்!'' என்று கூறித் தலை வணங்கினான்.

மாமல்லரும் பரஞ்சோதியும் கலீ ரென்று சிரித்தார்கள்.

ஏனெனில், அந்த வீரர்களால் கொண்டு வரப்பட்டவன் வேறு யாருமில்லை. நமது பழைய சிநேகிதன் குண்டோதரன்தான்.

''குண்டோதரா? இது என்ன? எதற்காக நீ வாதாபி ஒற்றன் என்று சொல்லிக் கொண்டாய்?'' என்று பரஞ்சோதி கேட் டார்.

''ஆம் சேனாபதி! நான் சொன்னது உண்மைதானே! 'வாதாபி ஒற்றன்' என்றால், 'வாதாபிக்குப் போய் வந்த ஒற்றன்' என்ற அர்த்தத்தில் சொன்னேன். உடனே அந்த வீரர்கள் என்னை ஒரே பிடியாய்ப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்து விட்டார்கள். அப்பா! அவர்கள் பிடித்த இடங்களில் இன் னும் வலிக்கிறது!'' என்றான்.

''ஆமாம், ஆனால் அந்த மரத் தின் மேலேறி என்ன செய்து கொண் டிருந்தாய்? எத்தனை நேரமாய் அங்கு உட்கார்ந்திருக்கிறாய்?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''பிரபு! நேற்றிரவே இங்கு வந்து விட்டேன். காலையில் எழுந்து பார்த்தால் நமது சைனியம் வந்து கொண்டிருக்கிறது. உடனே மரத்தின் மேல் ஏறியவன்தான். இத்தனை நேரமும் நமது சைனியத்தின் கணக்கு எண்ணிக் கொண்டும், வாதாபி புலிகேசியை ஜயிப்பதற்கு இந்தச் சைனி யம் போதுமா என்று யோசித்துக் கொண் டும் இருந்தேன்.'

''என்ன முடிவு செய்தாய்? சைனியம் போதுமா?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''சுவாமி! அதைப் பற்றி எனக்குச் சந்தேகமே இல்லை. ஆனால் வாதாபிக்கு நாம் போய்ச் சேருவதற்குள்ளே, அஜந்தா குகைக்குப் போயிருக்கும் புலிகேசிச் சக்கரவர்த்தி வாதாபிக்குத் திரும்பி வர வேண்டுமே! அவர் வெளியில் தங்கி விட் டால் என்ன செய்கிறது என்றுதான் கவ லைப்படுகிறேன்!'' என்றான் குண்டோ தரன்.

(தொடரும்)



''வேலைக்காரி தினமும் எதை யாவது போட்டு உடைக்கிறாள்டா... நேற்று பீங்கான் தட்டு...''

''இன்னிக்கு...?''

''நேற்று நான் டைப்பிஸ்ட் தாரா தேவியோடு சினிமாவுக்குப் போனதை...!''

- சி. நாச்சிமுத்து

''மாப்பிள்ளை ரொம்ப அவசரப் புத்திக்காரர் போலிருக்கு...!''

''எப்படிச் சொல்றீங்க...?''

''பொண் பார்த்துட்டுப் போகும் போது, ஊருக்குப் போனதும் 'தந்தி' கொடுக்கறேன்னு சொல்றாரே...!''

- சேலம் நீலமேகம்



# தூங்கும்போது மட்டும் நீளும் உடல்!

!! நம் விழியிலுள்ள 'லென்ஸ்' மட்டும் ஆயுள் முழுவதும் வளர்ந்து கொண்டே யிருக்கும்...

!! விழித்திரை என்று கண்ணுக்கு முன் பாதுகாப்பாய் அமைந்துள்ள ஜவ்வு போன்ற உறுப்புக்கு ரத்த ஓட்டம் கிடை யாது. அது பிராண வாயுவை நேரடியாகச் சுற்றுச் சூழலிலிருந்து கிரஹித்துக் கொள் கிறது.

!! இரவு தூங்கும் போது நம் உடல் சுமார் எட்டு மில்லி மீட்டர் அளவு நீள்கிறது. காலை எழுந்ததும் பழைய உயரத்துக்குச் சுருங்கி விடுகிறது. இதற்குக் காரணம் : நமது முதுகெலும்பில் உள்ள 'Cartilage discs' என்ற உறுப்புக்கள், நாம் நிற்கும் போதும், உட்கா ரும் போதும் அழுங்கி விடுகின்றன. படுத் துக் கொள்ளும் போது அவற்றின் மீதான அழுத்தம் குறைவதால், விரிந்து விடுகின் றன. அதனால், உடல் உயரமும் கூடுகிறது!

!! மூளையைச் சுற்றிலும் உறை போன்று உள்ள மெல்லிய சவ்வில் (membrane) ரத்த நாளங்கள் இருக்கின்றன. வலியை உணரச் செய்யும் நரம்புகளும் அதில் உள்ளன. ஆனால் இதைத் தாண்டி உள்ளே இருக்கும் மூளைக்கு வலியை உண ரும் சக்தி கிடையாது. அத்தகைய நரம்புகள் அங்கு இல்லை. எனவே மூளை ஆபரேஷன் நடக் கும் போது கூட நோயாளி அங்கு வலி யை உணர மாட்டார்!

!! நம் வயிற்றில் அமிலம் சுரந்து உணவு ஜீரணமாக உதவுகிறது என்பதை அறிவீர்கள். இந்த அமிலம் ஒரு காரின் ஸ்டீல் மேல் பரப்பைத் துளைக்க வல்லது. ஆனாலும் அது நம் வயிற்றின் உட்புறத்தைச் சேதப்படுத்துவதில்லை. இரைப்பையின் உட்புறம் ஒருவித கெட்டியான, கொழ கொழப்பான திரவப் பூச்சினால் அமிலத்தி லிருந்து பாதுகாக்கப்படு கிறது.

!! உடலின் நரம்பு மண்டலம் அனுப் பும் சமிக்ஞைகள் சில, மணிக்கு 288 கிலோ மீட்டர் வேகத்தில் கூடப் பயணம் செய்து உரிய இடத்தை அடைகின்றன. வயது முதி ரும்போது இந்த வேகம் பதினைந்து சதவிகி தம் குறைகிறது.

!! குளிரும் போது உடல் சூட்டை அதிக ரிக்க உதவுவதற்காகத்தான் உடல் நடுங்கு கிறது. தசைகள் இயங்கும் போது சூடுபிறக் கிறது.

!! காற்று மண்டலத்தில் உள்ளதைக் காட்டிலும் இரண்டரை மடங்கு அதிகமான அழுத்தத்தில் பிராண வாயுவைச் சுவாசித் தால் அதுவே உடலுக்கு விஷமாகி விடும்! கடலுக்கடியில் நீந்துவோரும் முத்துக் குளிப்போரும் சிலிண்டர்களில் அடைத்துச் சுவாசிப்பது இருபது சதவிகிதம் பிராண வாயு அடங்கிய ஒரு வாயுக் கலவையைத் தான்.

தொகுப்பு : உதய்லால்



# ஆயிரம் காலத்துப் பயிர்!

சிரிப்புச் சிரிப்பாய் வந்தது.

வியர்வை வாசனையோடு இறுக்கிக் கழுத்தைக் கட்டிக் கொண்டு இருபது வயசுப் பெண் கேட்டது. 'ஏம்மா இந்த அப்பாவைக் கல்யாணம் பண்ணிண்டே?'

பெண் ஒன்றும் லேசுப் பட்டதில்லை. இதற்கு அப்பா என்றால் வெல்லம்தான். இவளை ஆழம் பார்க்கத்தான் கேட்கிறது.

'பண்ணிக்கவும் எதுவும் காரணமிருக்க வில்லை. வேண்டாம் என்று சொல்லவும் காரணமிருக்கவில்லை' என்று பெண்ணிடம் பதில் சொல்வதா?

அப்போது தானாக வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்க திறமையும் இல்லை. வாய்ப்பும் இல்லை. வாய்த்த மாதிரிக்கு அனுசரித்துப் போக வழியிருந்தது. எல்லாவற்றையும் விட அனுசரணை அது இது என்றெல்லாம் யோசனை பண்ணவோ வேறு முறையில் பரீட்சார்த்தம் பார்க்கவோ நேரம் இல்லை என்பது தான் நிஜம். நாள் முழுக்க வேலையிருந்தது. ஒரு நாள் மாவிளக்கு, ஒரு நாள் ஆயிரத்தெட்டு கொழுக்கட்டை, ஒரு வாரம் கிராம வாசம், ஒரு ஸீஸன் நாத்தனாரைப் பெண் பார்க்கும் படலம், இன்னொரு ஸீஸன் மூத்த நாத்தனார் டெலிவரி. சப்பாத்தி வகையறாவில் மாமனாரையும் தெளிவான மெல்லிய சாய்வுத் தையலில் நாத்தனாரையும் அசத்துகிற ஆர்வம் இருந்தது. தெரிந்ததையெல்லாம் எடுத்துக் காட்டுகிற அவசரம் எப்போதும் இருந்தது.. இவையெல்லாவற்றுக்கும் இடையில் கணவன் என்ற புதிய மனிதனும் அறிமுகமானான்.

ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு முகம் காட்டினான். இன்னும், இருபத்திரண்டு வருடங்கள் ஆன பின்னும், கணவன் இன்று என்ன செய்வான், இன்று எப்படி நடந்து கொள்வான் என்று சொல்ல வரவில்லை!

ஒருகால் தேர்ந்தெடுக்கக் கூடிய வாய்ப்புக் கிடைத்திருந்தால் இந்தக் கணவனை இவள் மறுத்திருக்கக் கூடும். பெருத்த குரலும் அலட்டலும் பிடிக்காமல் போயிருக்கக் கூடும்.

தன் பெண்ணுக்கு நிச்சயமாய் இப்படித் திருமணம் செய்து வைக்க மாட்டாள். இவளுடைய பெண் தன் இஷ்டப்படி தேர்ந்தெடுப்பாள். பழகிப் பார்த்து, மனத்துக்குப் பிடித்தால் மட்டுமே ஏற்பாள். குடும்பம் முழுக்க மகள் தேர்ந்தெடுப்பவனையே ஒப்புக் கொள்ளும்...

இந்த மாதிரி நினைப்பே ரொம்பவும் இனித்தது. தான் ரொம்ப உசரத்துக்கு மிதந்து விட்டாற்போல ஒரு பெருமை மேலிட்டது.



மாலதி

**ப**க்கத்து வீட்டுப் பெண்ணுக்குத் திருமணம் நிச்சயமாயிற்று ''கோதாவுக்கு நிஜமாகவே பிடித்ததா அவனை?'' என்று நூறு முறை கோதா அம்மாவைக் கேட்டாள் இவள்.

''நீயேதான் கோதாவிடம் கேட்டுக் கொள்ளேன்'' - கோதா அம்மா இவளிடமே திருப்பினாள்.

கோதாவிடம் கேட்டபோது சிரித்தாள். அந்தச் சிரிப்பிலும் கண்களிலும் எதுவுமே தெரியவில்லை.

ஒரு நாள் கோதாவை வெளியே அழைத்துப் போக மாப்பிள்ளைப் பையன் வந்திருந்தான். இவளுக்குத் தவிப்பாயிருந்தது. எல்லோரும் பார்க்க, நடத்தி பஸ் ஸ்டாண்ட் வரை அழைத்துப் போவானா? முதலில் வரும் ஆட்டோவைப் பிடித்து ஊருக்கு வெளியே அழைத்துப் போவானா? ரோட் கிராஸ் செய்யும் போது இயல்பாய்க் கையைப் பற்றுவானா...? கோதா என்னை செய்வாள்?

**ம**றுநாள் கோதா வந்தாள் இவள் வீட்டுக்கு - யாரோ தோழிக்கு போன் செய்ய. கிசுகிசுப்பும் பெருமையுமாய்ச் சந்தோஷ உரையாடல் இருக்கும் என்று எதிர்பார்த்துத் தன்னிச்சையாய் இவள் ஒட்டுக் கேட்டாள். அப்படியெல்லாம் எதுவுமே இல்லை. ரொம்பவும் இறந்த, அத்தியாவசியமான உரையாடல் அது.

இப்போதைய பெண்கள் இண்டெலக்ட் போர்வையில் சின்னச் சின்ன தென்றல்களை, பூஞ்சிலிர்ப்புகளை இழந்து விட்டனரோ என்று தோன்றியது.

ஏதோ பேச்சில் மாப்பிள்ளைப் பையனைப் 'பூஞ்சை' என்று ஆங்கிலத்தில் குறிப்பிட்டாற் போல இருந்தது. அது எந்த வகைப் பூஞ்சைத் தனம் என்று தெரியவில்லை.

'மற்றபடி எதுவும் விசேஷமில்லை' என்று போனைக் குலுக்கிக் கொண்டு புறப்பட்டாள் கோதா.

**நா**லு நாள் கழித்து, கோதா அம்மா வாசல் பக்கம் வந்தாள். ''புடைவை, மற்ற ஜவுளி வாங்கியாயிற்றா?'' என்று விசாரித்தாள் இவள்.

கோதா அம்மா நிறுத்தி நிதானமாய்ச் சொன்னாள். ''கோதாவுக்கு அந்தப் பையனைப் பிடிக்கலையாம்.''

''இப்போ என்ன செய்யப் போகிறீர்கள்?''

''வேறென்ன? கல்யாணத்தை நிறுத்த வேண்டியதுதான்!''

''ஏன் பிடிக்கலையாம்?''

''எத்தனையோ விஷயங்கள் பிடிக்கல்லையாம். சேரில் உட்கார்ந்த வாக்கில் தொம் தொம் என்று ஆடுகிறதாம் அந்தப் பிள்ளை. ஹோட்டலில் சர்வரை 'ஸ்ஸ்' என்று கூப்பிட்டதாம். 'பெர்முடா ட்ரையாங்கிள்' பற்றித் தெரியாதாம்....

''ஏர் இண்டியாவில் வேலை செய்யும் பையன், இவளைக் கூட வைத்துக் கொண்டு விஷ்ணு பவனில் லாட்டரி ரிஸல்ட் பார்த்து விட்டு, லாட்டரி டிக்கெட்டும் வாங்கி



வருமோ? 'சுய முன்னேற்றத்தில் துளி நம்பிக்கையில்லை இந்த ஆளுக்கு' என்கிறாள் கோதா...''

''இந்த மாதிரி காரணங்களுக்காக யாராவது கல்யாணத்தை நிறுத்துவார் களா?''

''அது என்னவோ! கோதாவின் அப்பா சொல்லி விட்டார். இதெல்லாம் மேலோட்டமாய்த் தோன்றியவை. ஆழமாய், பளிச்சென்று ஒரு காரணம் இருக்கும். அது இன்னதென்று குறிப்பிட்டுச் சொல்ல வராமல் இருக்கலாம். அதனால் இந்தக் கல்யாணம் வேண்டாம் என்று தீர்மானமாகச் சொல்லி விட்டார்.''

''பையனைப் பிடிக்கவில்லை என்று எப்படி பட்டவர்த்தனமாகச் சொல்லி, கல்யாணத்தை நிறுத்துவது? சம்பந்தப்பட்டவர்களைப் புண்படுத்துவதா யிற்றே! நியாயமாயிருக்குமா?'' என்றாள் இவள்.

கோதா அம்மா பெரிதாய்ச் சிரித்தாள்.

''அதையெல்லாம் பையனிடமே சொல்லிவிட்டாள் இந்தப் பெண். நகை போதவில்லை. சீர் சரியில்லை என்றெல் லாம் கல்யாணம் நிறுத்துவதை விட, 'மனசு சரிப்பட்டு வரவில்லை' என்று பிள்ளை பெண் தீர்மானம் செய்வது அநியாயமா? என்கிறாள் கோதா.''

இவளுக்கு இன்னும் அதிகக் கவலை வந்தது. தன் பெண்ணுக்கு எப்படிச் சுயம்வரம் ஏற்பாடு செய்து கொடுப்பது? எந்தத் தகுதி அடிப்படையில் வரன் பார்ப்பது? ஒன்றுமே புரியவில்லை.

மறுநாள் கோதா வீட்டில் ஏக அமர்க்களம். வாசல் நிரம்ப கார்கள். மனிதர்கள். விசாரித்தபோது சொன்னார்கள் - கோதா தன் தூரத்து உறவுப் பையனை மணக்கச் சம்மதித்து விட்டாளாம். 'ஸ்ரீதர் பரவாயில்லம்மா, புத்திசாலி, யோக்யன், அது போதும்' என்று சர்ட்டிபிகேட் வழங்கி விட்டாளாம் கோதா!

இவள் ஓடிப்போய்த் தன் பெண்ணிடம் சொன்னாள் : ''பார், கோதா ஏற்கெனவே அறிமுகமானவனை உறவுக் காரனையே பண்ணிக் கொள்ளச் சம்மதித்து விட்டாள். உனக்குத்தான் எப்படிப் பண்ணுவேனோ தெரியவில்லை....'' ஏதோ எழுதிக் கொண்டிருந்த பெண் விசுக்கென்று திரும்பி, கண்ணுக்குள் பார்த்தாள்.

எளிதாய்ப் பதில் சொன்னாள்.

''நீ அப்பாவைப் பண்ணிண்டது போல யாராவது அறிமுகம் இல்லாதவனைப் பார்த்துடும்மா, அதுதான் ஈஸி.''

செவிட்டில் அறைந்தது போல இருந்தது. மேலே மேலே போய், கடைசியில் எலிப் பெண்ணுக்கு எலிப் பிள்ளை பார்த்தது போல, இது என்ன பத்தாம்பசலித் தனமான முடிவு?

பதில் சொன்ன பெண் எழுந்து போய் விட்டிருந்தாள். அவள் யோசித்துத்தான் சொல்லியிருப்பாள்.

ஏற்றுக் கொண்டு விட்டதில் ஒவ்வாமை வராது. நல்லதோ கெட்டதோ, புதிதாய் அறிமுகமாகும் மனிதனின் எல்லா வற்றையும் ஏற்றுக் கொண்டு, வாழ்க்கை தொடங்க முடியும்; அல்லது உள்ளும் புறமுமாய் ஏற்கெனவே அறிந்த ஒரு நபரை அவரின் ப்ளஸ் மைனஸ்களோடு ஏற்றுக் கொள்ள முடியும். இரண்டுமில்லாமல் ஒருவரை நிச்சயம் செய்து விட்டுப் பழகிப் பார்க்க வாய்ப்புத் தரப்படக் கூடாது....

'எம்மா இந்த அப்பாவைக் கல்யாணம் பண்ணிண்டே' என்று மகள் அன்று கேட்டதை நினைத்து இவளுக்கு மீண்டும் சிரிப்புச் சிரிப்பாய் வந்தது.

---

''தலைவரே! ஏன் கவலையோடு இருக்கீங்க?''

''கட்சி ஆரம்பிச்சு ஆறு மாசமாகுது. இன்னும் ஒரு கோஷ்டி கூட உருவா கலையேய்யா!''

''கூசாமல் இவ்வளவு வரதட்சணை கேட்கறீங் களே, பெத்தவங்க மனசு என்ன பாடுபடும்னு கொஞ்சமாவது யோசிச்சீங்களா?''

''பெண் பிடிக்கலைன்னு சொன்னால் அவன் மனசு என்ன பாடுபடும்? அதான் இவ்வளவு வர தட்சணை கேட்டோம்!''

- ஞா. ஞானமுத்து





# மனம்கூட மருந்தாகலாம்



**ச**ங்கரிக்கு ஐம்பது வயது. இன்னும் ஆறு மாதங்கள்தான் உயிரோடு இருப்பீர்கள் என்று டாக்டர்கள் கெடு வைத்து விட்டனர். காரணம், அவருக்குக் கான்ஸர். இடது மார்புக்குள்ளே எலும்பெல்லாம் சுத்தமாகத் தேய்ந்து போய்விட்டது. பார்க்காத வைத்தியம் இல்லை. போகாத மருத்துவ மனை இல்லை. நிலைமை மோசமாகிக் கொண்டுதான் வந்ததே தவிர, ஒரு வித முன்னேற்றமும் காணவில்லை. பொறுக்க முடியாத வலி. எடை குறைந்து கொண்டே வந்தது. ஒரே சோர்வு; அசதி. நடக்கக்கூட முடியவில்லை.

இப்போது?....

இரண்டு வருடங்கள் ஆகின்றன. சங்கரியின் உடல் நிலையில் நல்ல முன்னேற்றம். ஆறு மாதக் கெடு எல்லாம் தாண்டியாகிவிட்டது. வலி குறைந்துவிட்டது. வாழ வேண்டும் என்ற உறுதி மனத்துக்குள் வேரூன்றி வளர்ந்து விட்டது. அதனால் வீட்டில் நிறைய வேலைகளைச் செய்ய முடிகிறது.

**ர**மாவுக்கு ஆர்த்ரைடிஸ். இந்த 45 வயதில் சாதாரணமாக வருவதுதான். இருக்கிற மருத்துவமனைகளில் எல்லாம் நுழைந்து மருத்துவம் பார்த்தாகிவிட்டது. வலி நிவாரண மருந்து சாப்பிட்டுச் சாப்பிட்டுக் குடல் எல்லாம் புண்ணாகி விட்டது. இரண்டு முழங்கால்களும் வீங்கி, ஒரே வலி. தன் மீது வெறுப்பு; தன்னைப் படைத்த கடவுளிடம் கோபம். மனநல மருத்துவரிடம் போனதில், நிறைய தூக்க மாத்திரைகள் சாப்பிடப் பழகினார்!

இப்போது பார்த்தால், இவரா இப்படிக் கஷ்டப்பட்டார் என்று கேட்கத் தோன்றும். முழங்கால் வீக்கம் கணிசமாகக் குறைந்துவிட்டது. தூங்குவதற்கு மாத்திரை தேவையில்லை.

**இ**து மாதிரி நிறைய கேஸ்களை அடுக்கிக் கொண்டே போகலாம். அத்தனையிலும், ஆச்சரியப்பட வைக்கும் அளவுக்கு மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன.

எந்த வகை மருத்துவம் இது?

குறைந்த செலவில் முழுமையான வைத்தியம் பெற முடியும் என்று நிரூபிக்கும் 'லோ காஸ்ட் ஹெல்த் கேர்' அமைப்பு வழங்கும் சிகிச்சை. இவர்கள் புதிதாக எதையும் சொல்லி விடவில்லை; ஆதி காலத்தில் இயற்கையின் நியதிகளை ஒட்டி மனிதன் நீண்ட நாள் ஆரோக்கியமாக வாழ்ந்து வந்த முறையைத்தான் வலியுறுத்தி வருகிறார்கள்.

''மேசை மேல் நிறைய வேலைகளைக் குவித்து வைத்திருக்கிறீர்கள். தூக்கம் தூக்கமாக வருகிறது. இதை முடித்துவிட்டுத்தான் தூங்கப் போவது என்று உறக்கத்துக்கு எதிராக, விழித்துக் கொண்டு வேலை பார்க்கிறீர்கள் அல்லவா? அது நல்லதல்ல. இயற்கைக்கு விரோதமானது!'' என்கிறார் மேற்படி அமைப்பைச் சேர்ந்த எட்வர்டு.

''அதே போல்தான் பசியும். வேலையை முடித்து விட்டுத்தான் சாப்பாடு என்று தள்ளிப் போட்டுக் கொண்டே போனால்,

பனி வேளை தாண்டி, சாப்பிட உட்காரும் போது, எதுவுமே வேண்டியிருக்காது. உடலின் இயல்பான தன்மைக்கு விரோதமாகச் செய்யப்படும் இது போன்ற செயல்களே நோய்கள் வரக் காரணமாகின்றன!'' என்கிறார் இவர்.

''அப்படி என்றால் இத்தகைய காரணங்களை விலக்கிவிட்டால் மருந்துகள் அறவே தேவை இல்லை என்கிறீர்களா?''

''அப்படி நான் சொல்லவில்லை. உடம்பு என்று வந்துவிட்ட பிறகு அவசியமான அளவு மருந்து கொடுத்தாக வேண்டும். அறுவைச் சிகிச்சை தேவைப்பட்டால், அதையும் செய்து கொள்ளலாம். ஆனால் எல்லா உபாதைகளுக்குமே மருந்துகள் தேவைப்படுவதில்லை.

''உதாரணத்துக்கு ஒரு நிகழ்ச்சி சொல்லுகிறேன் : பள்ளிக்கூட ஹெட்மாஸ்டராய் இருந்து ஓய்வு பெற்ற பெரியவர் ஒருவர், தமது பிள்ளையின் வீட்டுக்கு, பம்பாய்க்குப் போனார். போன இடத்தில், பேரக் குழந்தைகளிடத்தில், பள்ளிக் கூடம் போலவே கறாரும் கண்டிப்புமாக ஒரே சிடுசிடுப்பு. பேரப் பிள்ளைகள் ஒரேயடியாகத் தாத்தாவை வெறுத்து ஒதுக்கின. தாத்தாவைக் கண்டாலே ஓடி ஒளிந்தன. ரொம்ப மிரட்டினால், உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ தாத்தா என்று திருப்பியடித்தன. பிள்ளைக்கும் அப்பாவின் மீது இதன் காரணமாக ஒரே வெறுப்பு. 'என் நிம்மதியைக் குலைக்க வேண்டாம். நீங்கள் ஊருக்குப் போய் விடுங்கள் அப்பா!' என்று சொல்லி விட்டான். திரும்பி ஊருக்கு வந்தவருக்கு ஒரே மன உளைச்சல். பேரக் குழந்தைகள்தான் அப்படி என்றால், பிள்ளையும் அல்லவா போய்விடு என்று சொல்லிவிட்டான் என்று குமைந்து போனார். கால்கள் இரண்டிலும் அடை அடையாக இன்னொரு தோல் மாதிரி வளர்ந்தது. இரவு அரிப்பு ஏற்பட்டுச் சொறிய ஆரம்பித்தால், காலையில் படுக்கை எல்லாம் அப்படியே செதில் செதிலாக உதிர்ந்து கிடக்கும்!

''இவர் வைத்தியர்கள் சிலரைப் பார்த்துவிட்டு மருந்துகளும் சாப்பிட்டு வந்திருக்கிறார். ஆனால் ஒருவித குணமும் தெரியவில்லை. எங்களிடம் வந்த போது நோயைப் பற்றிச் சொன்னார். நாங்கள் அவர் வாழ்க்கையைப் பற்றிக் கேட்டோம். குடைந்து குடைந்து கேட்ட பிறகு நடந்தது அத்தனையும் சொன்னார்.

''அவர் மனதில் அடைபட்டிருந்த அத்தனை குறைகளும் வெளிப்பட்டவுடன், அவருக்கே அழுத்தம் எல்லாம் மறைந்து விட்ட உணர்வு உண்டாயிற்று. பிறகு சில இயற்கையான ஆரோக்கிய முறைகளைச் சொல்லிக் கொடுத்தோம். இதில் 'ரிலாக்ஸேஷன் டெக்னிக்குகளும்' அடங்கும். அவருடைய தோல் உபாதை படிப்படியாகக் குறையத் தொடங்கியது. அநாவசியமாகப் பேரக் குழந்தைகளிடம் ஹெட்மாஸ்டர்தனமாக அதிகாரம் செய்து, அவர்கள் வெறுப்பையும், கூடவே மகனின் கோபத்தையும் சம்பாதித்துக் கொண்டது புரிந்தது. இப்போது அவர் மகனிடம்தான் இருக்கிறார். பேரப் பிள்ளைகள் அவரை அன்புடன் தாத்தா, தாத்தா என்று கொண்டாடுகிறார்கள்!''

''என்னென்ன மாதிரி பயிற்சிகள் கொடுக்கிறீர்கள்?'' என்று எட்வர்டிடம் கேட்டோம்.

''ஆர்த்ரைடிஸ்ஸுக்கு, முதலில் அவரவர் மனதில் அடைத்துக் கொண்டிருக்கும் உணர்ச்சிகளை, சம்பவங்களை, வெளிப்படுத்தச் செய்கிறோம். 'ஜேக்கப்சன் ரிலாக்சேஷன்' என்கிற முறையில் உடல் உறுப்புக்களைப் படிப்படியாகத் தளர்த்தும் வகையைச் சொல்லித் தருகிறோம். சூடான தண்ணீர் ஒத்தடம் கொடுக்கிறோம். பப்பாளி இலைகளைச் சூடாக்கி, பாதிக்கப்பட்ட முழங்கால்கள் மீது வைக்கிறோம். இரும்புச் சத்துக்காக, முருங்கை இலையைக் காய்ச்சி டானிக் மாதிரி கொடுக்கிறோம்.

''இப்படி ஒவ்வொரு வகை நோய்க்கு, ஒவ்வொரு வகை வைத்தியம் கையாளப்படுகிறது. ஆனால் பொதுவாகவே இந்த நோயிலிருந்து மீள்வேன் என்று மனதில் உறுதி வேண்டும், அது மிகப் பெரிய சக்தி. அது, குணமாகும் வேகத்தை அதிகப்படுத்தும். அதற்கு நாங்கள் உதவுவதோடு மாக்னடோ தெரபி, அக்யுபிரஷர், ஒளிக்கதிர்ப் பாய்ச்சல் என்று பல வகைகள் பயன்படுத்துகிறோம்.

''மொகப்பேரில் அரசு ஒதுக்கியிருக்கும் நிலத்தில் இப்போது செயல்பட்டு வருகிறோம். மிகக் குறைந்த செலவில் வைத்தியம்; அதன் மூலம் முழு ஆரோக்கியம் என்பதே எங்கள் குறிக்கோள்!''

– சாருகேசி

## அடுத்த இதழில்...

● இந்தியாவின் எதிர்காலம்...

– கல்கி பொன்விழா பட்டிமன்ற நிகழ்ச்சியின் தொகுப்பு இடம்பெறும்

# வட்டமேஜை

◆ 2.8.92 கல்கி இதழோடு ஒரு குட்டி மெக்கானிக்கையே தந்துள்ளீர்கள்! என் போன்ற ஸ்கூட்டர் வைத்திருக்கும் சுந்துக் குட்டிகளுக்கு ஒரு நிலையான வரப்பிரசாதம்.
பாண்டிச்சேரி - 3,
தா. செல்வராசன்.

◆ 'உங்கள் ஸ்கூட்டரை நேசியுங்கள்' இலவச இணைப்பைத் தனியே பிரித்தெடுத்து, தன் ஸ்கூட்டர் பாக்ஸில் போட்டுக் கொண்டு விட்டான் என் நண்பன் ஒருவன்.
பெங்களூர் - 79, கணேஷ் பாபு.

◆ வாழ்த்துச் சொல்லுகிறோம்! என்று வாசகர்கள் பாடிய கவிதை மழையில் (வாழ்த்துக்களில்) நனைந்தேன். அனைத்துமே அருமையாக இருந்தன. திருநின்றவூர் வாசகரின் வாழ்த்து உண்மையானது. 'கடையில் தொங்குவதற்கு வருவதல்ல நீ, வாசகன் மனதில் தங்குவதற்கு வருகின்ற தங்க இதழ்!' - படைத்திட்ட வாசகனுக்கு நன்றி, பாராட்டுக்கள்.

'மருத்துவக் கருவிகளில் மகத்தான முன்னேற்றம்' - சாருகேசியின் கட்டுரை வியக்க வைக்கிறது. பிரெயின் அட்லாஸ் மெஷினை வைத்து அரசியல்வாதிகளைச் சோதித்தால் நன்றாக இருக்குமே!
தூத்துக்குடி - 2,
எஸ். ராமசுப்பிரமணியன்.

◆ இரண்டே பக்கங்களில் வெளி வந்துள்ள, கிருஷ்ணாவின் "இளமையில் கல்" சிறுகதை. இக்காலப் பெண்களுக்கு நல்வழி காட்டும் கதை.
சென்னை - 77, ஜெயந்திகணேஷ்.

◆ மங்கல அரிசி, சந்தனம், குங்குமம் கொடுத்து நேரில் அழைத்த மகிழ்ச்சியைத் தந்தது கல்கியின் பொன் விழா அழைப்பு.
தஞ்சை, கே. காமாக்ஷி.

◆ அட்டையில் 'நகைச்சுவை நாயகன்' எஸ்.வி. சேகரின் புகைப்படத்தைப் பிரசுரித்து இந்த இதழினை அலங்காரப்படுத்திச் சிறப்பாக்கியிருக்கிறீர்கள்! உள்ளே 'பெரிய தம்பி'

## ஒரு குட்டி மெக்கானிக்கே கிடைத்து விட்டார்!

- நாடகத்தின் முதல் அத்தியாயம் போனஸாகக் கிடைக்கப் பெற்று இருக்கிறோம்!
பாண்டிச்சேரி - 1,
ஏ. முரளி.




◆ ஏங்க! பாரதி மௌலி! ஒரு மாதத்துக்கு முன்னாலேயே இந்த ஐடியாவெல்லாம் நீங்க சொல்லக் கூடாதா? எனக்கு ரொம்ப உதவியாக இருந்திருக்குமே!
காரைக்கால்,
எஸ். அருளானந்தம்.

◆ அரசன் படத்தில் இடம்பெற்றுள்ள ஏகப்பட்ட வன்முறைக் காட்சிகளைப் பற்றிப் பேட்டை ரவுடி பாணியில் விமர்சனம் செய்திருக்கும் பாங்கு பாராட்டுக்குரியதுதான் என்றாலும் இத்துணை வன்முறையா? எப்படி அனுமதித்தார்கள்!
அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

◆ ஆண்களுக்கும் பெண்களுக்கும் எப்போதும் முரண்பாடான கருத்துதான் எங்கும் நிலவும். இதில் ரிடையர்மெண்ட் மட்டும் என்ன விதிவிலக்கா?

கோவில்பட்டி, அ. ராமகிருஷ்ணன்.



## பம்பாய்க் கடிதம் :

### “தண்ணீர், தண்ணீர்”

பம்பாயில் தண்ணீர்ப் பஞ்சம் எந்த அளவுக்கு உள்ளது என்பதை இரண்டு வி.ஐ. பிக்கள் சமீபத்தில் அனுபவித்தார்கள். ஒருவர் மத்திய சமூக மேம்பாட்டுத் துறை அமைச்சர் சீதாராம் கேசரி. பம்பாய் வந்திருந்த போது தங்கியிருந்த 'வைற மௌண்ட் கெஸ்ட் ஹவுஸில்' இவர் குளிப்பதற்கு ஒரு பக்கெட் தண்ணீர் கிடைக்கவில்லை! கட்சித் தொண்டர்கள், கெஸ்ட் ஹவுஸ் சுற்றுச் சுவரிலிருந்த ஒரு துளை மூலம் ரப்பர் குழாய் போட்டு, சட்டமன்ற மேலவைத் தலைவரான ஜே. எஸ். திலக்கின் அடுத்த பங்களாவிலிருந்து இரண்டு பக்கெட் தண்ணீர் எடுத்துக் கொடுத்தார்கள்.

அடுத்த வி.ஐ.பி. சபாநாயகர் எம்.டி. சௌத்ரி. இவரது வீட்டிலும் மாடியில் உள்ள குளியலறையில் தண்ணீர் வராத காரணத்தினால், கீழேயிருந்து தண்ணீர் தூக்கி வந்து குளிக்க வேண்டியிருந்ததாம்! வி. ஐ. பி.க்களுக்கே இந்த நிலையென்றால், பொது மக்கள் படும் பாட்டை என்ன சொல்ல?

### பட்டினி கிடந்த சிறுவர்கள்!

தாணா வட்டத்தைச் சேர்ந்த உமர்க் காடியில் இளம் குற்றவாளிகளின் சிறை உள்ளது. இதில் பணியாற்றும் ஊழியர்களின் வேலை நிறுத்தம் காரணமாக இங்குள்ள சிறுவர்கள் பட்டினி கிடக்க நேரிட்டது. இதனைப் பொறுக்க முடியாத பாதிக்கும் மேற்பட்ட சிறுவர்கள் பாதுகாப்பை உடைத்துக் கொண்டு தப்பியோடி விட்டனர். பிஞ்சுகளைப் பட்டினி போட்டால், அவர்கள் ஏன் மீண்டும் குற்றவாளிகளாக மாட்டார்கள்? என இங்குள்ள பத்திரிகைகள் கேள்வி கேட்கின்றன.

## ஹீரோவாக வாழ்ந்த 'வில்லன்'

### 'கப்பர் சிங்'கின் மறைவு

பிரபல ஹிந்தி சினிமா நடிகர் அம்ஜத் கான் சமீபத்தில் மாரடைப்பினால் காலமானார். வயது 49தான். ஷோலேயில் கப்பர் சிங் ஆகவும் மற்றும் பல வில்லன் வேடங்களிலும் நடித்துப் பிரபலமான இவர், நிஜ வாழ்க்கையில் ஒரு ஹீரோ!

'பாலிவுட்'டில் மிகப் பிரபலமான அம்ஜத்கான், கடந்த இரண்டு வருடங்களாகச் சினிமா கலைஞர்களின் சங்கத் தலைவராக இருந்தார். ஹீரோ முதல் லைட்பாய் வரை அனைவரையும் அரவணைத்துக் கொண்டு போகும் சுபாவத்தால் இவர் இப்பதவிக்கு இரண்டு முறை ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சில வருடங்களுக்கு முன்பு இவருக்கு ஏற்பட்ட விபத்தையொட்டி இவர் எடுத்துக் கொண்ட ஓய்வும், உட்கொண்ட கணக்கற்ற மருந்துகளும் இவரது உடலை ஊதச் செய்து விட்டன.

இவரது இறுதி ஊர்வலத்திற்குப் பம்பாய்ப் பட உலகமே திரண்டு வந்தது. ராஜ்கபூரின் இறுதி ஊர்வலத்திற்குப் பிறகு மிக அதிகமான மக்கள் கலந்து கொண்ட ஊர்வலம் இதுதான் எனப் பத்திரிகைகள் வர்ணிக்கின்றன.

– அம்ருதா பார்த்தசாரதி

# பொன்விழா ஆண்டு தங்க நகைப் பரிசுத் திட்டம் - 26

## பொன்னம்மா

◆ பொன்னம்மா, உன் நிலா நெற்றியில் விளையாடுவதோ ''பிறை வடிவக் கட்டி''. உன் மீன் விழித் தூண்டிலில் சிக்கிய என் மனத்தைத்தான் நீ காதில் ''மாட்டலாக'' மாட்டிக் கொண்டாயோ. உன் தாமரை முகத்துக்கேற்ற ''கமலப் பூ கம்மல்''. உன் சங்குக் கழுத்தில் தவழும் பொன் சங்கிலிக்கு இடையே ஜோடி அன்னப் பறவை டாலரைக் கொண்ட அந்த முத்து மாலைச் சரமானது உன் பல் வரிசை முத்துக்களுக்கு முன் தலைகுனிந்து மார்பில் இறங்கி விட்டது போலும். என் தாய் சொல்வது போல என் உள்ளத்தை வளைத்து உன் கையில் வளையல்களாய் அணிந்து விட்டாய். உன் இடையோடும் உறவாடும் ஒட்டியாணத்தைப் பார்த்து நான் பெருமூச்சு விடுவதை உன் கால் சதங்கைகள் பரிகசித்து கலீர் கலீர் எனச் சிரிக்கின்றனவே.

- ஏ.கே. லலிதா, தேவிகாபுரம்.

◆ நெற்றிச் கட்டி சூட்டிவரும்
மூன்றாம் பிறையே...
பொட்டுவைத்து வரும்
புதுநிலவே!
வண்ணமை இட்டு வளர்காதில்
கம்மலிட்டு
எம்மை மயக்க வந்த பேரழகே!
கழுத்து நிறைய விழும் நகையால்
இல்லை இன்பம்
உன் உதட்டோரம் கனியும்
புன்னகையே...
என்னை வீரமூட்டி வாழ்த்துக்
கூறும் பொன்னம்மா...
புன்னகை சிந்து பொன்னம்மா
பொன்னினும் மிகையாய்
மின்னும் என் கண்ணம்மா.
எளிமைதானே பெண்ணுக்கழகு
ஏன் புரியவில்லை இந்த
தேசத்திற்கு!

- முத்தையதாசன், சென்னை - 24.

◆ கதவு திறந்து நுழைந்த அபர்ணா ஆபர்ணாவாக ஜொலித்தாள். ஒற்றை வைர மூக்குத்தியில் வரப்போகும் மங்களம் வானவில்லாய் மின்னலடித்தது. கைகளில் கடனில் உதவப்போகும் வளையல்கள். சரசரக்கும் பட்டுப் புடைவையின் ''ஸ்டாடிக்'' மின்சாரம் டிஸ்சார்ஜ் ஆகும் மெல்லிய கால் கொலுசு. விரலால் அழகு பெற்ற மெட்டி. துணைக்குப் பக்கத்தில் மிஞ்சி. இறங்கிய கண்களுக்கு விலங்கு போடும் பூவயிற்றைத் தொட்டுத் தழுவும் வெள்ளிச் சங்கிலி. நீண்டு, மாரிடையில் பெருமிதத்தோடு அலையும் கொடுத்து வைத்த ஒற்றைக் கிரிஸ்டல் செயின். வெள்ளிச் சொம்பில் பாலுடன் நுழைந்த மனைவியை காமிராப் பார்வையால் சிறை செய்யும் கணவன். அபர்ணாவின் புன்னகைக் கீற்றில் காணாமல் போகும் பொன்னகைகள்.

- ரமா சேகர், நெய்வேலி.

◆ ஒரு மாமாங்கத்திற்கு முன்னே
காதல் வயப்பட்டேன் - உன்னை
காதலிக்கத் தலைப்பட்டேன்
காலத்தின் கட்டாயம்
நம் காதல் தடைபட
என் கடமை அழைத்திட - நம்
தேசத்தின் எல்லை காக்கச்
சென்றிட்டேன்.
அழகில் ரதியென்று உனைச்
சொல்லி - அந்த
ரதியை நான் அழகுபடுத்த
விரும்பவில்லை
புன்னகை புரியும் என்
பொன்னம்மாவே
ஈறாராண்டுகள் கழித்து வந்து
இப்போது நான் பார்க்கிறேன் உன்னை
மணக் கோலத்திலே!
நெற்றிச் கட்டியும் காதுச் சரமும்
பட்டை தீட்டிய ஒற்றை
வைர மூக்குத்தியும்
அன்னம் மிதந்துவரும்
அழகான நெக்லஸும்
முத்து மாலையும், மான் ஓடும்
பென்டன்டும்
இன்ன பிற ஆபரணமும் அணிந்து
பெண்ணுடம்பே,
பொன்னுடம்பாய்

நீயே உன் பெயராய்,
உன் பெயரே நீயாயிருக்க
நான் பார்க்கின்ற
பேறு பெற்றேனே
காலிறந்த போதும்,
கைகளால் ஆசிகூறவும்
வாயினால் வாழ்த்தவும்
எனக்கு வழி செய்த
ஆண்டவனைத் துதிக்கின்றேன்.

- லட்சுமி குமரன், கிறிஸ்டியாநகரம்.

◆ அதோ வருகிறாள் என் பொன்னம்மா. தூர வரும்போதே அவளுடைய கொலுசின் ஓசை என் காதுகளில் விழுகிறது. சூரிய ஒளியில் அவளின் கைவளையல்கள் வைரவளையல்கள் போல் ஜொலிக்கின்றன. அவளின் நடைக்கேற்ப சடையில் உள்ள பொன் குஞ்சலம் ஆடுகிறது. நெற்றிச் சுட்டி தவழும் அவளின் நெற்றியில் வியர்வை முத்துக்கள். அவளின் முத்து மூக்குத்தியுடன் போட்டியிடுகின்றது. கோபமாக அவள் என்னை நோக்கும் போது அவளது ஜிமிக்கிகளும் கூட என்னைக் கோபமாகக் கேள்வி கேட்பன போல் ஆடுகின்றன. மேகம் சூழ்ந்த வானின் மின்னல் போல அவளது கருத்த அடர்ந்த தலையில் மாட்டல் மின்னுகிறது. அவள் சில சமயங்களில் என்னிடம் ஆடும் கண்ணாமூச்சி போல அவளது தங்கச் செயினும் புடைவை மறைப்பில் கண்ணாமூச்சி காட்டுகின்றது.

- ஜே. பத்மா, பழஞ்சூர்.

◆ அடக்கமான, ஆனால் பார்வையை மீள விடாமல் செய்து விடும் அழகு. கோவில்களில் அம்மன் சிலை பார்க்கிறோமே, ஒரு மரியாதை உணர்வு ஏற்படுகிறதல்லவா? அதே நினைப்பு பொன்னம்மாவின் மேலும் யாவருக்கும் உண்டு.

ஒரே ஒரு மெல்லிய தங்கச் செயின். காதுகளில் இரு பொன் வளையங்கள் காற்றில் ஆட அவள் நடக்கும் அழகே அலாதி. நிமிர்ந்தால் 'பளிச்' என மின்னும் மூக்குத்தி பலமுறை பூமியையே பார்த்திருக்கும். காரணம் அவள் தலைகுனிந்து நடக்கும் பாங்கு.

'பொன் நிறம்' எனக் கதைகளில் படிப்பதுண்டு. அதற்கு மாதிரி பொன்னம்மா.

- ஆர். ஹரிஹரசுப்ரமணியன்,
நாகர்கோவில் - 1.

பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள பொன்நகைப் பரிசு பெறுபவர் :

- ஏ.கே. லலிதா,
7/86 சன்னதித் தெரு,
தேவிகாபுரம் S.O.
606 902.
திருவண்ணாமலை,
சம்புவராயர் மாவட்டம்.






# வானம்பாடி

**வ**ழக்கம் போல் அவன் மெள்ள பாடிக் கொண்டிருந்தான். இடையிடையே பாட்டை நிறுத்தி, ''ம்... டயல் பண்ணுங்க சார்'' - என்று கூறி மீண்டும் பாட்டைத் தொடருவான்.

லைன் கிடைக்காத எரிச்சலில் சிலர் நின்று கொண்டிருந்தாலும், அவர்களை நோக்கியும் அவன் பாடுவான். அவர்களுக்குள் மேலும் எரிச்சல் பொங்குவது அந்த முகங்களில் தெரியும். இப்படி பாட்டு பாடுவதற்குத்தான் இந்த டெலிபோன் பூத்காரன் பிறவி எடுத்திருக்கிறானோ என்று எனக்குத் தோன்றும்.

அவன் எவ்வளவுதான் சந்தோஷமாகப் பாடினாலும், அவன் பின்னால் நின்று கொண்டிருக்கும் அந்த ஊன்றுகோல்களைப் பார்க்கும் போது எனக்கு அவன் மீது இலேசான இரக்கம் வெளிப்படும். ஒரு கால் இல்லாமல் அவன் தன் மனசுக்குள் எப்படியெல்லாம் கஷ்டப்படுகிறானோ?

சட்டென்று அவன் பாட்டு நின்றது. ''நீங்க டயல் பண்ணுங்க சார்'' - என்று ரிசீவரை என்னிடம் நீட்டியபின், அவனுடைய பாட்டுக்கச்சேரி தொடங்கியது. எதிர்பார்த்த படி லைன் கிடைக்கவில்லை. 'சே' என்று ஒரு அலுப்புடன் டயல் செய்வதை விட்டு விட்டேன். மற்றவர்கள் மெள்ள மெள்ள கிளம்பி விட்டனர்.

சைக்கிளில் தடாபுடாலென்று வந்து இறங்கினான் ஒருவன். வந்தவன், டெலிபோன் பூத்காரனிடம், ''இன்னா, மச்சி... விஷயம் கேள்விப்பட்டேன்...'' - என்றவாறே அவன் தோள்களைப் பிடித்துக் குலுக்கினான். தொடர்ந்து, என்னைப் பார்த்துச் சிரித்தான். நானும் சிரித்து வைத்தேன்.

சிநேகப் புன்னகையை என் மீது வீசியவன், ''சார்... நம்ப அண்ணன் இவ்வளவு நாள், கல்யாணமே பண்ணிக்க மாட்டேன்னு பிடிவாதமா இருந்தாரு. இப்பத்தான் கல்யாணத்துக்குச் சம்மதிச்சிருக்காரு'' - என்றான்.

''சரி! நான் சைக்கிளைக் கடையில விட்டுட்டு வரேன்'' - என்று கூறி, வந்த வேகத்தில் போய் விட்டான்.

**சுனில்குமார்**

அவன் போனதும், டெலிபோன் பூத் காரன் பாட்டை நிறுத்தி, ''பய என்ன சொல்லிட்டுப் போறான்னு பாத்தீங்களா... சார். என்னமோ அவன் சொன்னது னாலதான் நான் கல்யாணம் பண்ணிக்கப் போறதா நினைச்சுக்கிட்டான். இவ்வளவு நாள் கல்யாணம் பண்ணிக்கத் தோணலை. இப்ப... ராதாவைப் பத்திக் கேள்விப் பட்டதும் அவளைக் கல்யாணம் பண்ணிக் கறதுக்குச் சம்மதம் தெரிவிச்சேன். இதுக்குப் போய் அந்தப் பயல் இப்படி அலட்டிக்கி றானே'' என்றான்.

நானும் சற்று சந்தோஷத்துடன், ''ரொம்ப நல்லது. பொண்ணு இதே ஊரா?'' என்று கேட்டேன்.

''ஆமா சார்'' - என்றவன், ''இப்ப ட்ரை பண்ணுங்க சார், லைன் கிடைக்கும்'' - என்று தன் வேலையைக் கவனித்தான். கூடவே பாட ஆரம்பித்தான்!

மீண்டும் என்னுள் எரிச்சல் எழுந்தது. அதை அடக்கிக் கொண்டேன். டயல் செய்தபடி, ''உங்களுக்கு வரப் போறவங்க எப்படி? உங்களை மாதிரியே நல்லாப் பாடுவாங்களா?'' - என்று இலேசான கிண்டலுடன் கேட்டதும், அவன் பாட்டு நின்று போனது.

''அவளுக்கு மௌனமே உலகம்தான். இந்த உலகமே மௌனம்தான் சார்'' என்றான் மாறுபட்ட குரலில்.

ஒன்றும் புரியாதவனாய் நான் அவனைப் பார்க்க, அவனே, ''சார், அவளுக்குக் காது கேட்காது; எதுவும் பேச முடியாது. அவ செவிட்டு ஊமை சார்'' என்றான்.

என் நெஞ்சிற்குள் இடியொன்று இடித்தது. ஓர் இறுக்கமான மௌனம் நிலவ, அவனே, ''ம். எனக்கு இந்த ஊன்றுகோல் இருக்கு. அவளுக்கு, இனி எல்லாமே நான்தான்'' என்றான்.

நான் டயல் செய்த லைன் கிடைக்க, அங்கிருந்து, ''ஹலோ, ஹலோ'' - என்று சப்தமிட்டது ஒரு குரல். ஒன்றும் பேசத் தோன்றாமல் நான் மௌனமாக நின்றிருக்க, அவன் மீண்டும் பாட ஆரம்பித்தான்.

## அருள்வாக்கு



சப்தமும் அசைவும் சேர்ந்து சேர்ந்தே, ஒன்றாகவே உண்டாகின்றன. இப்படி உண்டான அப்புறம் அந்த அசைவிலிருந்து ஒரு ஸ்தூலமான வஸ்து அல்லது மனோபாவம் உண்டாகிறது. ஆகக்கூடி சப்தத்திலிருந்தே சிருஷ்டி ஏற்படுகிறது. இந்தப் பிராசீனமான தத்துவம் ஸயன்ஸ், பகுத்தறிவுப்படியும் கூட சரியானதுதான் என்று தெரிகிறது.

சிருஷ்டி, அதிலே நடக்கிற பல காரியங்கள், எண்ணங்கள், இவற்றின் ஸூக்ஷ்மமான சப்தங்கள் ஆகாசத்தில் (Space) அப்படியே நிறைந்துதான் இருக்கின்றன. நாம் கையைத் தட்டினால் ஒரு சப்தம் உண்டாகிறது என்றால் அது என்ன ஆகிறது? அது அப்படியே ஆகாசத்தில்தான் தங்கி விடுகிறது. நல்ல காரியங்கள், கெட்ட காரியங்கள் எல்லாவற்றிற்கும் ஒவ்வொரு சலனம், சப்தம் இருக்கிறது. இந்த சப்தத்தை உண்டாக்கி விட்டால் அந்த நல்லது அல்லது கெட்டது வந்துதான் ஆக வேண்டும். நல்லெண்ணங்கள் ஜனங்களுக்கு உண்டாகிறது என்றால் அப்படி உண்டாக்குகிற சலனங்கள் இருக்க வேண்டும். அவற்றிற்கான சப்தங்கள் இருக்க வேண்டும். இப்படிப்பட்ட சப்தங்களை நாம் உண்டாக்க முடியுமானால் லோகத்தில் ஜனங்களுக்கு நல்ல எண்ணங்கள் தோன்றிக் கொண்டே இருக்கும். ஜனங்களுக்கு உயர்ந்த எண்ணங்கள் இருப்பதை விட லோகத்துக்குப் பெரிய க்ஷேமம் என்ன இருக்கிறது? அப்படி எண்ணுவதற்கு அவர்களைத் தூண்டுகிற சக்தியைப் பெற்ற சப்தங்கள்தான் வேத மந்திரங்கள்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

# முற்றுகை

## 3

**ஓ**டைக்குப் போய் விட்டு வந்தாள், சொர்ணம். வழுவழுத்த நாக்கிலிருந்து எச்சிலைக் காறிக் காறித் துப்பினாள். இடுப்பைச் சுற்றிலும் உளைச்சல்.

எதிர்ப்பட்ட பெண்களுக்கெல்லாம், ''என்ன சொர்ணம், இப்படி முகம் கொராவிப் போயிருக்கியே'' என்று கேட்கத் தான் ஆசை. கேட்கவில்லை. கேட்டால், கமுகமாகப் பேச மாட்டாள், சொர்ணம். அவளது செருக்கான பாவனைதான் கிடைக்கும். ஏளனமான பார்வைதான், பதிலாக வரும். இது எதற்கு?

'நாயைக் கேட்பானேன், கடி வாங்குவானேன்' என்று ஒதுங்கிப் போய் விட்டனர்.

'வீடு வெறுமனையாய்ப் போனாலும், வீராப்பு குறையவில்லை. கழுந்து ஒடிகிற அளவுக்குத் தலைக்கனம் இருக்கிறவள்' என்று அபிப்பிராயம் அவர்களுக்கு.

அனுபவம் இல்லாமல் அபிப்பிராயம் வருமா?

வீடு வந்து சேர்ந்த சொர்ணம் பல்லை விளக்கினாள். நிமாண்ட் நாழியில் குளித்து முடித்தாள். எல்லாம் அவசரமயம்தான்.

நைலக்ஸ் சேலையும், ஜாக்கட்டும் அணிந்து கொண்டாள்.

உச்சந்தலையில் எண்ணெயை வைத்துத் தேய்த்துக் கொண்டாள். சடைபின்னி, ஹேர் பின்களைச் சொருகினாள்.

எண்ணெய் வழியும் முகத்தில் சோப்பு போட்டுக் கழுவித் துடைத்தாள். பவுடரை லேசாக அப்பிக் கொண்டாள். கையகலக் கண்ணாடியில் முகம் பார்த்து, சரியான இடத்தில் பொட்டு இட்டுக் கொண்டாள்.

கண்ணாடியில் -

மஞ்சள் வெளிச்சமாய் ஜொலிக்கிற சின்ன முகம்.

சிறிய விழிகளின் இருண்ட கருமையின் மினுமினுப்பு, முகத்தின் தங்க நிறத்தை அடிக்கோடிட்டுத் துல்லியமாக்குகிறது.

மனசுக்குள் மடைதிறந்து பொங்கிப் பெருகி நுரை ததும்புகிற பெருமிதம்.

'இந்த நிறமும், லட்சணமும் எந்தச் சிறுக்கிக்கு வரும்? எம் புட்டுப் பெரிய கோடீஸ் வரியாயிருந்தாலும்... ஏங் கால்த் தூசிக்குப் பெறுவாளா? என்னைப் பார்த்துப் பொறாமைப்பட்டுப் போய், தலைகுனியத்தானே செய்யணும்?'

கண்ணாடியிலிருந்து கண்ணையும் நினைவையும் எடுத்தாள். கண்களை இறக்கிக் கழுத்துக்குக் கீழே பக்கவாட்டில் பார்த்தாள். வயலெட் கலர் ஜாக்கட், புஜப் பகுதியில் நிறம் மாறி வெளுத்திருந்தது. பார்க்க அசிங்கமாக இருந்தது. நைலக்ஸ் சேலையில் வயலெட் கலர் போகவில்லை. ஆனால் பெரிய பெரிய ரோஜாப்பூ டிசைன் கள் முழுவதும் சாயம் கரைந்து, சேலை பூராவும் பரவி, லட்சணத்தையே நாசமாக்கியிருந்தது.

''85 ரூபாதாம்மா சீலை. நீ வாரத்துக்கு அஞ்சு ரூபாயாத் தந்து கழிச்சா போதும். வேற ஏவாரியை மாதிரி என்னையும் நெனைச்சிடாதேம்மா. நம்மகிட்டே வார்த்தை சுத்தம் இருக்கும். ஒரு பொட்டுச் சாயம் கூட விலகாது. சேலை கிழிஞ்சு நார் நாராகப் போற வரைக்கும், இந்தக் கலரும் போகாது. கனிவும் போகாது. அப்படியே இருக்கும். ஃபுல் கேரண்டி.''

நாலு மாசத்து முன்னால்தான், சத்தியம் பண்ணிச் சரக்கு கொடுத்திருந்தான், துணி வியாபாரி. அவன் சத்தியம் கரைந்து, கலர் மாறி... ச்சே!

அவளுக்குள் பற்றிக் கொண்டு வந்த கோபாக்கினியில் அந்த வியாபாரி பஸ்மமானான்.

''**சோ**று வைக்குறீயா?''

''ஏம்மா கண்ணு, இன்னிக்கு வீட்லே இரேன்.''

''எதுக்கு?''

''பெத்த மனசு தாங்க மாட்டேங்குதடி... இந்த நிலைமையிலே ஒன்னை வேலைக்கு அனுப்புறதுக்கு, மனசு சம்மதிக்க மாட்டேங்குதடி.''

''ஒன்னோட சம்மதம் கேட்டுக்கிட்டு இங்க எது நடக்கு? பொழுது அடையுது. விடியுது. நம்ம குடும்பம் தொறுங்கி நொத்த விடானது. இதெல்லாம் ஒன்னோட சம்மதம் கேட்டுக்கிட்டா... நடக்குது?''

**மேலாண்மை பொன்னுச்சாமி**



கருணாநிதி முதலமைச்சர் ஆன போது, ஒருவர், மிகப் பெரிய மாலையை அணிவித்தார்.

அருகிலிருந்த ஒருவர், ''ஆள் உயர மாலை'' என்று கூறி ரசித்தார்.

உடனே முதலமைச்சர், ''ஆள் உயர மாலை போடலாம், ஆனால் அதைப் போடுகின்ற ஆள் உயர மாலை போடக் கூடாது'' என்றார். ஒரே சிரிப்பு.

ஆதாரம் : 'உலக மகா எழுத்தாளர்கள்'

தகவல் : எஸ். முகம்மது யூசுப்

''என்னடி... இப்படி விட்டாத்திய பேசுதே?''

''பெத்த மகளுக்காக ஒரேயடியா உருகி வழியாதேம்மா. உருகி வழிஞ்சதுக்காக உருப்படியா என்ன நடக்கப் போகுது? உக்கார வைச்சு, ஒன்னாலே சோறு போட்டுற முடியுமா?''

''அதுக்கும் மேலே கோடி கோடியா ஆசை உள்ளே கிடக்குதடி. ஆசையைச் சொல்லக் கூட முடியாம, நம்ம ரக்கைகளை ஒடிக்கப் போட்டிருச்சே, நம்ம விதி. நா என்ன செய்ய?''

''அதைத்தான் நானும் சொல்லு தேன்ம்மா. விதி இருக்கே, அது... ஒன்னையும் என்னையும் எப்படியெப்படியெல்லாம் ஆட்டிப் படைக்க வேடிக்கை பாக்கக் காத்திருக்கோ... யார் கண்டது? இம்புட்டு உருகி வழியற ஒன்னைக் கூட, நாளைக்கு - என்னைக் கொடுமை பண்ணிப் பாக்குற நிலைக்குத் தள்ளினாலும் தள்ளிருதோ... என்னவோ?''

''ச்சீய்! வாயைக் கழுவுடி. கன்னி வாக்கோ, கரி நாக்கோன்னு சொல்லுவாக. பலிச்சாலும் பலிச்சிறப் போகுதடி. வா. வந்து சாப்புடு.''

சாப்பிட்டாள். அம்மா சோறு வைத்துத் தந்த சில்வர் தூக்குச் சட்டியை எடுத்துக் கொண்டாள். சின்னச் சிட்டையும், சில்லறை போட்டு வைத்திருந்த பிளாஸ்டிக் டப்பாவையும் எடுத்துக் கொண்டாள்.

புறப்பட்டாள். பார்த்துக் கொண்டிருந்த வேலாயியின் கண்கள், குஞ்சுண்ட பறவையாகத் தவித்துக் கொண்டிருந்தன. மௌனமாய் நகரும் மகளையே பார்த்தாள்.

''போய்ட்டு வாரியா?''

''ம்.''

''போய்ட்டு வா கண்ணு. சண்டை சத்தம் போடாம, பத்திரமா வந்து சேரு.''

''ம்.''

செருப்பை மாட்டிக் கொண்டாள் சொர்ணம். முற்றத்தில் இறங்கினாள். உதிக்கிற பத்தனிப்பில் சூரியன். கீழடி வானப் பந்த மேகத் துண்டுகள் ரத்தச் சிவப்பாகக் கன்றிப் போயிருந்தன. காலைச் சூரியனின் கண்படாத மேக இணுக்குகள், வெள்ளித் தகதகப்பாக...

தை மாசப் பனி வீர்யம் குறைந்திருக்கிறது. மாரி மூலைக் காற்று இலேசான காலைக் கூதலாக வீசுகிறது.

செவி மடலைத் தடவுகிற வாடைக் காற்று, உள்ளுக்குள் ஊடுருவி, ஒரு சுகமாகப் பரவுகிறது.

ராமலட்சுமியும் தூக்குச் சட்டியோடு வந்து விட்டாள்.

''என்னடி, அந்தக் கழுதைகள் எங்கே?''

''யாரு... செங்கம்மாவும் ராசாத்தியுமா?''

''ஆமா. அதுகதான்.''

''போய்ட்டாக. ஊருக்கு வெளியே காத்திருப்பாக. வா. நாம போவோம்.''

கிழக்காக நீள்கிற தெருவில் நடந்தனர். கிராமம் இன்னும் காலை நேர உறக்கச் சடைவிலிருந்து முழுதும் முறித்துக் கொள்ளவில்லை. சோம்பல் நடையாய் நடக்கும் வேலைகள்.

சம்சாரி வீட்டுப் பெண்கள் மாட்டுச் சாணிகளை அள்ளுகிறார்கள். காளை மாடு உள்ள விவசாயிகள், பருத்தி விதையை ஆட்டுரலில் போட்டு ஆட்டிக் கொண்டிருக்கின்றனர். 'கடக்... கடக்'கென்று சப்திபிடுகிற ஆட்டுரல்.

டீக்கடைகளில் காலை நேர மனிதக் கசகசப்பு.

தெருவின் முடிவில் ஒரு பஸ் ஸ்டாப். அங்கிருந்து துவங்குகிற கப்பி ரோடு. இவர்களுக்காகக் காத்திருந்த ராசாத்தியும், செங்கம்மாவும் சேர்ந்து, நான்கு பேராக நடையைப் பிடித்தனர்.

சில மீட்டர் தூரம் கடந்தால்... தெற்காக நீள்கிற அகலமான தேசிய நெடுஞ்சாலை. சுத்தமான - வழுவழுப்பான - சாலை. இலை போடாமல் சோறு போட்டுச் சாப்பிடலாம். அவ்வளவு பளிச்சென்று சாலை.

அந்த ரோட்டில் ஏறி விட்டால்.... உலக மானுட சமுத்திரத்தில் கலந்து விட்ட மாதிரியோர் உணர்வு. முடிவற்று விரிந்து நீள்கிற பிரபஞ்ச வெளியில், கால் வைத்துக் கைகோர்த்து விட்ட மாதிரியாக ஒரு நினைப்பு.

ரோடு முழுக்க ஜனம். சைக்கிள்களும், வேன்களும், பஸ்களும், லாரிகளுமாய் எந்நேரமும் மனிதச் சலனங்கள்.

முன்னும் பின்னுமாய் - எதிரும் புதிருமாய் ஆட்கள். மூவரும் சற்றுத் தள்ளி முன் செல்ல, நாலடி பின்னால் சொர்ணம். ஒற்றை மனுஷியாக.

அவளாக உருவாக்கிக் கொண்ட இடைவெளி.

அந்த மூவரும் ஒரே வரிசையில் பேசிச் சிரித்தும், கும்மாளமுமாய் செல்ல - சொர்ணம் மட்டும் அதில் பட்டுக் கொள்ளாமல் தனிமையாகச் சென்றாள்.

ஒரே பேக்டரியில் வேலை செய்கிறவர்கள். ஒரே ஊரைச் சேர்ந்தவர்கள். அதற்காக-

அவர்களுக்குச் சமதையாக இவளால் போக முடியாது. இவளுக்குச் சமதையாக நெருங்கி வர அவர்களுக்குத் தகுதியில்லை. அழகில் ஈடாவார்களா? வாழ்ந்த வாழ்க்கையில் சமதையாவார்களா? ம்ஹூம்!

சொர்ணத்திற்குள் அக்காள் வந்தாள். கிருஷ்ணம்மா. அய்யா உடம்பைப் போல ஓங்குதாங்கானது. நின்றால்... வாசல் நிலை தட்டும். ஆனால், மனக அம்மாவைப் போல.

பயந்த மனம். நடுங்கிச் சாவாள்.

அடிபட்டு அழுது வீங்கிய முகத்தோடு, பிள்ளைகளோடு - அல்லது - தனியாக - அடிக்கடி வந்து விழுவாள். மூசுமூசுவென்று அழுவாள். தலைவிதியை நொந்து கொண்டு புலம்புவாள்.

அய்யாதான் இவள் வாழ்க்கையை நாசம் பண்ணி விட்டார். பாழுங்கிணற்றில் தள்ளி விட்டார் என்று ஒப்பாரி வைத்து அங்கலாய்ப்பாள்.

ரெண்டு நாள் கழித்து -



முன் வழுக்கை விழுந்த மாமா வருவார். அக்காளோடு பேச மாட்டார். அம்மாவிடம் மட்டும் பேசுவார். கிருஷ்ணம்மாளைப் பற்றிப் புகார் சொல்வார். 'வாய் நீளுது'

காடுகரை விளைய மறுப்பதை - விளைந்த விளைச்சலுக்கும் விலையில்லாமல் போனதைச் சொல்லிப் புலம்புவார்.

கிருஷ்ணம்மா இல்லாமல் மாடு கன்றைக் கவனிக்க முடியாமல் தான் திண்டாடுகிற அவஸ்தையைச் சொல்லுவார்.

எல்லாரும் கூடிச் சேர்ந்து தன்னை ஏமாற்றிக் கவிழ்த்து விட்டதாகக் குற்றம் சொல்வார்.

அன்றைக்குச் சாயங்காலமே -

அக்காளைச் சைக்கிளில் உட்கார வைத்துக் கூட்டிக் கொண்டு போய் விடுவார். பக்கத்து ஊர்தான். ரெண்டு மைலில் மாமா ஊர். அதுவும் விவசாயக் கிராமம்தான்.

பாவம்... மாமா! அவர் மீதும் குற்றம் இல்லை. ஏகப்பட்ட கனா. கனாக் காண்கிற அளவுக்கு ராமானுஜம் வீடு செல்வாக்காக இருந்தது.

ராமானுஜம் வீட்டில் பெண்ணெடுத்தால் - சமுத்திரத்தில் தலா போட்ட மாதிரி. ஏற்றம் போட்டு இறைத்தாலும் வற்றாது.

ராசா மாதிரி... வீட்டு மாப்பிள்ளையாக உட்கார்ந்து மைனர் வாழ்க்கை வாழலாம்.

இப்படித்தான் கனாக் கண்டார், மாமா?

ராமானுஜத்தின் சாவு சகல கனவுகளையும் சமாதியாக்கி விட்டது.

ராமானுஜம் வாழ்கிற வரை எத்தனை கடன் இருந்தது. எத்தனை கேஸ்கள் இருந்தன.. என்பதெல்லாம் தெரியவில்லை. சாவுக்குப் பிறகு, ஒன்றுக்குப் பத்தாகப் பாய்ந்து வந்தன. திரண்டு வந்தன. கூச்சல் போட்டன. ஆளுக்குக் கொஞ்சமாய் எடுத்துக் கொண்டது போக... மிஞ்சியது சூன்யம்தான்.

வேறு வழியில்லை. மனைவியை அழைத்துக் கொண்டு சொந்தக் கிராமத்திற்குப் போனார். எட்டியும் எட்டாத பிழைப்பு. சிறிய சம்சாரி. கைக்கு எட்டினால் வாய்க்கு எட்டாது. சாண் ஏறினால் முழம் சறுக்கும்.

திண்கிற புள்ளைகள். கழுத்தை நெறிக்கும் இல்லாமை. மூச்சுத் திணற அடிக்கும் வறுமை.

உள்ளுக்குள் - சண்டைகள் - சப்தங்கள் - சாபங்கள் - புலம்பல்கள்.

என்ன காரணமோ -

மூன்று மாசமாக அக்காள் வரவேயில்லை.

நல்ல நேரம் வந்து விட்டதோ...

(தொடரும்)


இந்திய ஒலிம்பிக்ஸ்
"நமக்குப் பழக்கப்பட்ட வாகனம் இதான். சமயத்துக்கு செய்ன் உதவும்!"
கட் அவுட் உயரத்துக்கு ஒரு ஜம்ப்
எத்தனை தடைகளானாலும் சரி, அலேக்கா தாண்டுவேன்!
உனக்காச்சு எனக்காச்சு
பார்த்துடலாம் ஒரு கை!

கற்பனை : ஜூலி

# எனக்கென்றும் ஓர் மனம்

ஒரே சமயத்தில் மூன்று படங்கள். தயாரிப்புச் செலவு எக்கச்சக்கமாக ஆகுமே? தப்பித் தவறி மூன்றுமே தோல்வி கண்டால் நம் கதி என்ன? - இதையெல்லாம் நான் சிந்திக்கவேயில்லை. செயலில்தான் இறங்கினேன்.

''அவளுக்கென்று ஓர் மனம்'' தமிழ்ப் படத்தில் ஜெமினி கணேசன்தான் ஹீரோ. இதை நான் சொன்ன போது அவர் கண்களில் நீர் ததும்பி விட்டது. காரணம், எங்களுடைய ஆழ்ந்த நட்பு. நட்பு ஒருபுறமிருந்தாலும் ''கலைகோவில்''க்குப் பிறகு அவரைப் பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு எனக்கு அமையவில்லை. அவர் கூடக் கேட்டிருக்கிறார், ''என்ன ஸ்ரீதர், நாம் இருவரும் சேர்ந்து ஓர்க் பண்ணி ரொம்ப நாளாகி விட்டதே'' என்று. ஆனால், சரியான கேரக்டர் அமையவில்லையே என்பதால் நானும் ஒத்திப் போட்டுக் கொண்டே வந்தேன். இப்போது நெடுங்காலம் பிரிந்திருந்த நண்பர்கள் மறுபடி கூடும் போது ஓர் ஆனந்தம் ஏற்படுமே, அத்தகைய ஒரு சந்தோஷம் எங்கள் இருவருக்குமே ஏற்பட்டது.

கதாநாயகி பாரதி. யார் இவர்? ''நெஞ்சிருக்கும் வரை'' படத்துக்கு முதலில் ஒரு கதையைத் தீர்மானித்து, அதிலே பாரதியை நடிக்க வைக்க எண்ணி மேக்அப் டெஸ்ட் போட்டு ஓ.கே. செய்த பிறகு, கதை மாற்றப்பட்டதால் அவர் நடிக்க முடியாமல் போனது! அந்த பாரதிக்கு இந்தப் படத்தில் வாய்ப்பு அளித்தேன். இன்னொரு ஹீரோயினாகக் காஞ்சனாவையே 'புக்' செய்தேன்.

இந்தி படத்தின் ஹீரோ புதியவர். பெயர் பிரேமேந்திரா. மன்மோகன் என்று இன்னொரு இளைஞர். அவர்தான் வில்லன். இந்தியிலும் பாரதியையே நடிக்க வைத்தேன். காஞ்சனாவுக்குப் பதில் இன்னொரு புதுமுகம்! ஆக மொத்தம் புதுமுகங்களே நடித்த படம் இது.

தமிழில் ஜெமினி, காஞ்சனாவை நடிக்கச் செய்து விட்டு ஹிந்தியில் முற்றிலும் புதுமுகங்களாகப் போட்டதற்குக் காரணம், பெரிய ஸ்டார்களைப் போட்டு பட்ஜெட்டை வீங்கச் செய்து விட வேண்டாம் என்ற நோக்கம்தான். ஹிந்தி பட உலகில் பல வெற்றிப் படங்களை ஏற்கெனவே எடுத்திருந்த எனக்கு, ஒரு தனி இடம் இருந்தது. அந்த பாபுலாரிடியைப் பயன்படுத்திக் கொள்ளலாம்; புதுமுகங்களைப் போட்டாலும் மக்கள் பார்ப்பார்கள் என்று எண்ணினேன்.

தமிழிலும் ஹிந்தியிலும் ''அவளுக்கென்று ஓர் மனம்'' வளர, அதே சமயம் ''உத்தரவின்றி உள்ளே வா'' படமும் உருவாகி வந்தது. தயாரிப்பு விஷயங்களில் நான் தலையிடவே இல்லை. முற்றிலும் கோபு பொறுப்பில் விட்டு விட்டேன். ஒரு தயாரிப்பாளர் எனக்கு எப்படி சுதந்திரம் தர வேண்டும் என்று விரும்புவேனோ அதே போல் ''உத்தரவின்றி உள்ளே வா'' விஷயத்தில் இயக்குனர் சக்கரவர்த்திக்குச் சுதந்திரம் அளித்தேன். படப்பிடிப்புக்குக் கூட நான் போகவில்லை. காரணம், செட்டில் என்னைப் பார்த்தால் மரியாதை காரணமாக அவர்கள் 'நர்வஸ்' ஆகலாம்; அல்லது தர்மசங்கடமாய் உணரலாம் என்பதுதான். ஆபீஸில் வைத்து டிஸ்கஷனில் கலந்து கொண்டு யோசனைகள் சொல்வேன்; வசனங்களை நோட்டம் பார்ப்பேன். அத்துடன் சரி.

படம் மிக நன்றாக உருவாகியது. ரவிச்சந்திரன், காஞ்சனா, நாகேஷ், மாலி, வெ. ஆ. மூர்த்தி, தேங்காய் சீனிவாசன் என்று அனைவரும் நன்றாக நடிக்க, நல்லதொரு காமெடி படம் என்ற அங்கீகாரம் கிடைத்தது; வசூலும் நன்றாக இருந்தது. இந்தப் படத்தில் நல்ல பெயர் வாங்கிய இன்னொருவர் ரமாபிரபா. அவருக்குப் பிரமாதமான ஒரு காமெடி காரெக்டர் அமைந்தது.

''அவளுக்கென்று ஒரு மனம்'' படத்தின் ஹிந்தி வடிவம்தான் முதலில் முடிந்தது. படம் வெளியிட பம்பாயில் ஏற்பாடுகள் நடந்தன. அப்போதெல்லாம் ஹிந்தி படம் ரிலீஸ் செய்வதில் விநோதமான ஒரு பழக்கம் உண்டு. அதாவது இந்தியா முழுவதும் ஒரே நாளில் ரிலீஸ் செய்ய மாட்டார்கள். பம்பாயில் முதலில் திரையிடுவார்கள். அது எப்படி ஓடுகிறது என்று பார்த்துத்தான் மற்ற பகுதிகளுக்கான விநியோகஸ்தர்கள், ஏற்கெ



வவே தந்த அட்வான்ஸ் தொகைக்கு மேல் செலுத்த வேண்டிய மீதிப் பணத்தைக் கொடுத்து விட்டுப் பெட்டிகளைக் கொண்டு போவார்கள். படம் பம்பாயில் 'ஹிட்' என்றால் எந்தப் பிரச்னையும் இராது. ஆனால் சரியாக ஓடாது போல் தெரிந்ததோ, போச்சு! விநியோகஸ்தர்கள் கொடுத்த அட்வான்ஸையும் திருப்பிக் கேட்பார்களே தவிர, மேற்கொண்டு பணம் பெயராது! படம் 'அம்போ'தான்!

இந்த முறை ரொம்ப ரிஸ்க்கானது என்பது எல்லோருக்கும் தெரிந்துதான் இருந்தது. ஆனாலும் எல்லாத் தயாரிப்பாளர்களும் டைரக்டர்களும் இந்த எழுதப்படாத வழிமுறைக்குக் கட்டுப்பட்டே வந்தார்கள்.

நான் எடுத்த படம் பற்றி எனக்கு நம்பிக்கை இருந்தது. புது முகங்களானால் என்ன? அழுத்தமான கதை இருந்தது. 'பெண்மைக்கு மென்மைதான் ஏற்றது' என்பதைச் சொல்லும் கதை. இது, நேர் எதிரான கதாபாத்திரங்கள் மூலம் உணர்த்தப்பட்ட விதம், நல்ல வரவேற்பைப் பெறும் என்றே எதிர்பார்த்தேன். ஸ்ரீதர் என்ற பெயருக்கும் ஒரு 'குட் வில்' இருந்தது. பிறகு என்ன?

**ப**ம்பாயில் ஒருசில விநியோகஸ்தர்களுக்குப் படத்தைப் போட்டுக் காட்டினேன். படத்தின் முடிவில் அவர்கள் ஒன்றும் பேசாமலே இருந்தது எனக்கு அதிர்ச்சி அளித்தது. ''உங்கள் அபிப்பிராயம் என்ன, தைரியமாகச் சொல்லுங்கள்'' என்று கேட்டேன். தயங்கித் தயங்கிச் சொன்னார்கள். ஒருவருக்குமே படம் பிடிக்கவில்லை! ''ஒரு வாரம் கூட ஓடுமா என்பது சந்தேகம்'' என்றார்கள்! எனக்கு என்னவோ போல் ஆகி விட்டது.

இரு மொழிகளில் படம் எடுத்திருக்கிறோம்; ஒரு வார இடைவெளியில் இரண்டையும் ரிலீஸ் பண்ணத் திட்டமிட்டுக் கொண்டிருக்கும் போது இப்படி பேசுகிறார்களே? தமிழ்ப் படத்துக்காவது வரவேற்பு இருக்குமா? அதுவும் டப்பா ஆனால் நம் கதி என்ன? நான் குழப்பமும் வேதனையும் அடைந்தேன். எனக்கென்றும் ஓர் மனம் இருக்கிறதே!

ராம்சாப்ரா பம்பாயின் பிரபலமான பட விநியோகஸ்தர். ஏற்கெனவே எனது வெற்றிப் படங்கள் பலவற்றை ரிலீஸ் செய்தவர். அவர் என் கைகளைப் பற்றிக் கொண்டார். ''ஸ்ரீதர்ஜி! கவலைப்படாதீங்க; வேறு யார் விநியோகித்தாலும் விநியோகிக்கா விட்டாலும் நான் படத்தை வாங்கி ரிலீஸ் பண்றேன். எப்படி ஓடினாலும் சரி, கவலை இல்லை. நீங்க என் நெருங்கிய நண்பர். உங்களுக்காக இதைக் கூட நான் செய்யாவிட்டால் எப்படி?'' என்று உருக்கமாகப் பேசினார். நான் ஓரளவு ஆறுதல் பெற்றுச் சென்னை திரும்பினேன்.

ஒரு வார இடைவெளியில், திட்டமிட்டது போலவே பம்பாயிலும் சென்னையிலும் படங்களை வெளியிட நாட்கள் குறிக்கப்பட்டன!

டைரக்டர் ஸ்ரீதர்

படம் உதவி :
ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

# தமிழ்நாட்டில் மகிழ்ச்சி பவனி வருபவர் யார்?



* மகிழ்ச்சி பவனி!



* பிரச்னை தீர்ப்பாரா?



* ஒரு சேஃப்டியாக...



* துணிவு இருக்கிறது



* நினைவூட்டல்.



* கோரிக்கை...



* 'தமிழகத்துக்கு வருக'!

● ஆர். கார்த்திகேயன், நாட்டரசன்கோட்டை.

*? கூட்டுறவுச் சங்கத் தேர்தலை ஒத்திப் போட வேண்டும் என்று வாழப்பாடியார் கோரிக்கை விடுத்துள்ளாரே?*

! எதிர்க்கட்சித் தலைவரின் கோரிக்கைக்கு மதிப்பளித்தது போல் காட்டிக் கொண்டு 'ஜெ' தமது விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள வாய்ப்பு.

● சி. பழனிசாமி, கொங்கணாபுரம்.

*? பாட்டாளி மக்கள் கட்சியின் பலம் நாளுக்கு நாள் குறைவது பற்றி...?*

! 'உம்' என்றால் ஆர்பாட்டம், 'ஏன்' என்றால் போராட்டம் என்று அளவுக்கு மீறிப் போய்க் கொண்டிருந்தால் மக்களுக்கு அலுப்புத் தட்ட, கட்சியின் செல்வாக்கு குறையவே செய்யும்.

● தா. செல்வராசன், பாண்டிச்சேரி.

*? போஃபர்ஸ் தொடர்கதை எப்போதுதான் முடியும்?*

! ஸ்விஸ் வங்கிக் கணக்குகளுக்குப் பின் மறைந்திருக்கும் நபர்களை வெளிச்சத்துக்குக் கொண்டு வருவதில் வெற்றி பெறும் வரை, அவ்வப்போது புதிய அத்தியாயங்கள் எழுதப்பட்டுத்தான் வரும்.

● கே. ஏ. காளிமுத்து, காரை.

*? மீண்டும் காமராஜர் ஆட்சி ஏற்பட காங்கிரஸார் என்ன செய்ய வேண்டும்?*

! முதுகுச் சவாரி போதும் என்று கீழே இறங்கி இரு கோஷ்டியினரும் கைகுலுக்க வேண்டும். பிறகு மக்களிடம் போய் அவர்கள் நலனுக்காக உழைக்க வேண்டும்.

● ஏ. சுகுமார், சென்னை.

*? தற்போது தமிழ்நாட்டில் ''மகிழ்ச்சி பவனி'' வந்து கொண்டிருப்பவர் யார்?*

! கருணாநிதி.

● எஸ். ராமசுப்பிரமணியன், தூத்துக்குடி.

*? அயோத்தி பிரச்னையை நரசிம்மராவ் முழுமையாகத் தீர்த்து விட முடியுமா?*

! மனம் வைத்தால் மார்க்கம் உண்டு. அர்ஜுன் சிங் கரம் வலுப்பட்டு அவர் கோஷ்டி பலப்படாமலிருப்பதற்காகவாவது முழு மூச்சுடன் நரசிம்மராவ் முயற்சி செய்துதானாக வேண்டும். இதில் பிரதமர் வெற்றி பெற்று விட்டால் அவர் செல்வாக்கு உயர, தொடர்ந்து நாட்டை வழி நடத்திச் செல்வது எளிதாகும். இல்லாதபோனால் சிக்கல்தான்.

● கு. பாரதி, மணலூர்பேட்டை. ❑

*? தேசபக்தி, கடவுள் பக்தி ஒரு மனிதனுக்கு எது முக்கியம்?*

! இரண்டும் வேறு வேறல்ல என்பதை உணர்த்தத்தான் பாரத

மாதாவை சக்தி வடிவில் கடந்த தலைமுறைத் தலைவர்கள் சித்திரித்தார்கள். இப்போ எல்லாம் போச்சு. இன்றையத் தலைவர்களுக்குப் பொருத்தமான சின்னம் பணமூட்டை (அல்லது பிரீஃப்கேஸ்)யாகத்தான் இருக்கிறது.

● எம். மதிஒளி, புதுச்சேரி.

? ஒய்வு அவசியமாங்க?

! ஆமாங்க. அப்படியே ஏதாச்சும் வாங்கிப் போடறதுன்னாலும் வசதி பாருங்க...

● எம். சிவா, தேனி.

? *''நாளை அரசியலில் எதுவும் நடக்கலாம்'' - ரஜினிகாந்த் இதை எதற்காகக் கூறியிருப்பார் என்று நினைக்கிறீர்கள்?*

! 'அரசியலில் ஆசை இல்லை' என்று இப்போ சொல்லியாகி விட்டது. நாளை ஆசை வந்து விட்டால் என்ன பண்ணுவது? அதற்குத்தான் ஒரு சேஃப்டியாக...

● வி. பி. மகராசி, மதுரை.

? *வெளிநாட்டில் வாழும் தமிழகத்தைச் சேர்ந்த டாக்டர்களைத் தமிழ்நாட்டுக்கு வருமாறு ஜெயலலிதா கோரியிருக்கிறாரே?*

! பின்னே, அவங்க மட்டும் அவமானப்படாம ஹாய்யா இருந்துக்கிட்டிருந்தா எப்படின்னேன்? வரட்டும், வந்து அனுபவிக்கட்டும்னேன்!

● எம். மதனகோபால், பம்பாய்.

? *சினிமா தியேட்டர் கட்டணம் இன்னும் கூடுகிறதே, சுகாதார வசதிகள் அதிகரிக்குமா?*

! கட்டணம் உயர ஜெயா ஜெயந்தி கொண்டாடி ஜால்ரா தட்டினால் போதும். அது வரவுக் கணக்கு. சுகாதார வசதிகள் அதிகரிக்க காசு பணம் செலவழிக்கவல்லவா வேண்டும்! செலவுக் கணக்காயிற்றே!

● கே. பாலமுருகன், சித்தாத்தூர்.

? *''எப்படியாவது வோட்டு வாங்க வேண்டும் என்று மக்களைத் தவறான பாதைக்கு அழைத்துச் செல்வதும் நாட்டின் சீரழிவுக்குக் காரணமும் அரசியல்வாதிகளாகிய நாங்கள்தான்'' என்று ஹெக்டே கூறுவது பற்றி...?*

! தவறுகளை ஒப்புக் கொள்ளத் துணிவு வேண்டும். அது ஹெக்டேயிடம் இருக்கிறது.

● ஆர். கருணாகரன், மேட்டூர்அணை.

? *எழுத்தாளர் ஜெயகாந்தனுக்குக் கிடைத்த விருது பற்றி?*

! அவருடைய நூல்களைத் தூசி தட்டி மறுபடி படித்து மகிழ ஒரு நினைவூட்டல்.

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? *மதுவிலக்குப் பிரசாரத்துக்கு ஒரு லட்சம் இளைஞர்களைத் தமிழக அரசு பயன்படுத்தப் போகிறதாமே?*

! பிரசாரம் முடிந்து களைத்து வருவோரை ஒரு லட்சம் பார்கள் வரவேற்கக் காத்திருக்கின்றன.

● தெ. க. திலீபன், வத்ராயிருப்பு.

? *பங்குச் சந்தை ஊழல் பற்றி விசாரித்து வரும் சி. பி. ஐ. இணை இயக்குனர் திமர் ராஜினாமாவுக்கு மத்திய அரசின் நிர்ப்பந்தம் காரணமா?*

! அவ்விதம் இருக்க முடியாது. விசாரணையை விரும்பாத, உயர் பதவிகளில் உள்ள, தனி நபர்கள் செய்யும் இடையூறுகள் காரணமாக இருக்கவே அதிக வாய்ப்பு. அவர்கள் அதிகார துஷ்பிரயோகம் செய்வதாயிருக்கலாம். அது அரசின் செயல் போல் தோன்றலாம். ஆனால் பின்னணியில் இருப்பது தனி நபர்களும் அவர்களின் சுயநலங்களுமே.

● டி. பத்மா, கோவை.

? *புலனாய்வு இதழியல் தவறா?*

! புலனாய்வு இதழ் என்ற பெயரில் அரைகுறையாக எதையாவது தெரிந்து கொண்டு, கற்பனையைத் தாராளமாகக் கலந்து, அரைவேக்காட்டுத்தனமாக எழுதுவது தவறே.

● முஸ்தபா கமால், தக்கோலம்.

? *ஒவ்வொரு ஆண்டும் சுதந்திர தினத்தன்று தாங்கள் எண்ணிக் கொள்வது?*

! 'இது சுதந்திர நாடு; நமக்குக் கருத்துச் சுதந்திரம் உண்டு' என்று நினைவூட்டிக் கொள்வதுதான்.

● மு. இரவிச்சந்திரன், சேலம்.

? *உ. பி. அரசினை டிஸ்மிஸ் செய்ய ஆலோசனை வழங்குவது கல்கிக்கு அழகா?*

! நீதிமன்றங்களின் உத்தரவுகளை மீறி நடந்து கொள்ள அனுமதித்துக் கைகளைப் பிசைந்து கொண்டு நிற்பது உ.பி. அரசுக்கு அழகா?

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
கே. பாரதி,
6, தேவாங்கர் வீதி,
மணலூர்பேட்டை - 605 754.
தெ. ஆ. (மாவ.)


இனி ஒரு சதி
3
கதை:
பத்மா ரவிசங்கர்
படம்:
இன்ஸ்பெக்டர் கார்த்திகேயன் தலைமையில் சந்திரசேகர் வீட்டுக்குப் போலீஸ் வந்து...
யாரும் எதையும் தொடலையே?..
இல்லை இன்ஸ்பெக்டர்..
டைனிங் டேபிள்ள கிடைக்கிற விரல் ரேகைகளை எடுங்கப்பா.. சமையலறையையும் கவனிச்சுடுங்க...
கார்த்திகேயன் டைனிங் டேபிளைக் கூர்ந்து பார்த்து...
ம்... இவர் தான் முக்கால் வாசி சாப்பிட்டிருக்கார். விருந்தின் ஆரம்பத்திலேயே...
பயந்த அர்ச்சனாவைத் தட்டிக் கொடுத்தபடி யுவராஜ்...
ஐந்தாவது நிமிஷமே சரிஞ்சுட்டாரே, ஸார்!
ஐ ஸீ... யார் யார் எங்கெங்கே உட்கார்ந்திருந்தது?
விவரங்கள் அறிந்த பின்...
மிஸ்டர் வில்வம்! விருந்திலே கொடிய விஷம். இங்கே இருக்கிறவங்களைத் தவிர வேற யாரும் வரவுமில்லை...


இன்ஸ்பெக்டர் நாங்க ஒத்துழைக்கக் காத்திருக்கோம். தயங்காம கடமையைச் செய்யுங்க.
இந்தாப்பா, ஒருத்தர் பாக்கியில்லாம எல்லாருடைய கை ரேகையையும் பதிஞ்சுக்குங்க...
வாசல் மணி ஒலிக்க...
அட, டாக்டர் வந்திருக்காரே... பெரியசாமி, சீக்கிரம் கதவைத் திறங்க...
டாக்டர் மகேந்திரனை அனைவரும் சூழ...
ஐயா உயிருக்கு ஆபத்தில்லையே?.. சொல்லுங்க, ஸார்!
டாக்டர் வருத்தத்துடன்...
ஹூம்... அவர் இறந்திருந்தாலே நல்லா யிருந்திருக்கும்...
டாக்டர், என்ன சொல்றீங்க?
ஐயாவுக்கு என்ன ஆச்சு?
தொடரும்

# நாடு கவனிக்கிறது நாராயணனை

"உன் கவிதை ரொம்ப நன்றாயிருக்கிறது; வாழ்த்துக்கள்" என்ற கடிதம் இலக்கிய கர்த்தா ஈ. வி. கிருஷ்ணப் பிள்ளையிடமிருந்து வரவே அந்த மாணவன் சந்திர மண்டலத்தில் சதிராடுவது போல் உணர்ந்தான். அது ஓரிரு தினங்களுக்குத் தான். திரும்பவும் பள்ளிக்குச் சம்பளம் கட்டப் பணம் இல்லாத ஏழைமை நிலை வருத்தியது. இருந்தாலும் கூட திருவிதாங்கூரில் உழவூர் என்னும் கிராமத்தைச் சேர்ந்த நாராயணன், எப்படியோ கஷ்டப்பட்டுப் படித்து ஒவ்வொரு நிலையிலும் முதல் மாணவனாகவே தேறி, கடைசியில் கேரளா பல்கலைக் கழகத்தில் முதுநிலைப் பட்டம் பெற்று வெளியேறினான். டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யரைச் சந்தித்து வேலை கேட்டான். "இவ்வளவு நன்றாகப் படித்துத் தேறியிருக்கிறாய்; உனக்கு எதற்கு குமாஸ்தா வேலை?" என்று சொல்லித் திருப்பி அனுப்பி விட்டார் அவர்! அவரிடம் அன்பளிப்பாகப் பெற்ற சில புத்தகங்களையும் மனம் நிறைய ஏமாற்றத்தையும் சுமந்து கொண்டு வந்தான் நாராயணன்.




அந்த கே. ஆர். நாராயணன்தான் இன்று நமது துணை ஜனாதிபதி. நாற்பத்தி ஒன்பது ஆண்டுகளுக்கு முன், உள்ளூரில் வேலை கிடைக்காததால், "டில்லிக்குப் போய்ப் பார்ப்போம்" என்று புறப்பட்டு ஒரு நண் பன் வீட்டில் கூச்சத்துடன் ஒதுங்கிய நாரா யணன், ஒருநாள் துணை ஜனாதிபதியா வோம் என்று எதிர்பார்த்திருக்கவா முடி யும்? ஸி. பி. ராமசாமி அய்யருக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும்!

மாதச் சம்பளம் ரூ 250க்கு ஓர் அரசு வேலை கிடைத்தது. ஏற்றுக் கொண்டார். ஆனால் அவர் மனம் பத்திரிகைத் துறையில் இருந்தது. பல்வேறு பத்திரிகைகளின் வாசல் படிகளில் ஏறி இறங்கினார். கடைசியில் எகனாமிக் வீக்லி என்ற ஒரு பத்திரிகை அவருக்கு இடமளித்தது. சம்பளம் ரூ 100தான் என்றாலும் 250 ரூபாய் அரசு ஊழி யத்தை விட இதுவே நாராயணனுக்குப் பிடித்திருந்தது!

இங்கு பணியாற்றியவாறே ஜெ. ஆர். டி. டாட்டாவுக்கு ஒரு கடிதம் எழுதினார். திற மையைக் கண்ட இடத்தில் ஊக்குவிக்கும் இயல்பு கொண்ட அவர், உடனே லண்டன் ஸ்கூல் ஆஃப் எகனாமிக்ஸ் என்ற கல்விக் கூடத்தில் நாராயணன் சேர உபகாரச் சம்பளம் அளித்தார். லண்டனில் படித்துக் கொண்டிருந்தபோதே பத்திரிகைகளுக்கும் எழுதி வந்தார் நாராயணன்.

லண்டன் ஸ்கூல் ஆஃப் எகனாமிக்ஸ் நிறுவனத்தின் உலகப் புகழ்பெற்ற பேராசிரி யர் ஹெரால்ட் லாஸ்கி, நாராயணனின் ஆற்றலால் கவரப்பட்டார். இளைஞனின் படிப்பு முடிந்து அவன் இந்தியா திரும்பிய போது நேருஜிக்கு ஒரு கடிதம் எழுதினார் லாஸ்கி. அதில் 'நாராயணனின் ஆற்றல் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளப்பட வேண்டும்' என்று சிபாரிசு செய்திருந்தார்.

அப்போது பிரதமராகவும் அயல் விவகார அமைச்சராகவும் விளங்கிய நேரு

புதிதாக ஆரம்பிக்கப்பட்டிருந்த IFS ல் (ஐ.ஏ.எஸ். போன்று அயல்நாட்டுத் தூதரக அதிகாரிகளுக்கு உரியது) நாராயணனுக்கு இடமளித்தார் - ஆனால் முறையான விதத்தில் இன்டர்வியூ நடத்திய பிறகுதான்.

உத்யோக நிமித்தம் ரங்கூனுக்குப் புறப்படவிருந்தார் நாராயணன். அதே சமயம் டில்லியில் படித்துக் கொண்டிருந்த பர்மியப் பெண் மா டிண்ட் டின்டைச் சந்தித்தார். காதல் மலர்ந்தது. அயல் விவகாரத் துறை அதிகாரி, அயல்நாட்டுப் பெண்ணை மணப்பதற்குத் தடை உண்டு. எனவே நேருஜி வரை போய் அனுமதி பெற்றுத்தான் காதல், திருமணத்தில் முடிந்தது. இதன் பிறகு மா டிண்ட் டிண்ட் பெயர் மாறி, உஷா ஆனார்!

அயல் விவகாரத் துறை அமைச்சகத்தில் பல நாடுகளில் பல்வேறு பதவிகளில் உழைத்த பிறகு கடைசியில் சீனாவில் இந்தியத் தூதராக நியமிக்கப்பட்டார் நாராயணன்.

ஜனதா ஆட்சியில் ஜவாஹர்லால் நேரு பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் பதவி வகித்தார்.

திருமதி காந்தி மீண்டும் பதவிக்கு வர, அமெரிக்காவில் இந்தியத் தூதராக நியமனமானார்.

**கொ**ஞ்சம் கொஞ்சமாக இவருக்கு அரசியலிலும் ஈடுபாடு உண்டாயிற்று. அதை உணர்ந்த ராஜீவ், கேரளாவில் ஒட்டப்பாலத்தில் காங்கிரஸ் வேட்பாளராக நிற்க வைத்தார். தொடர்ந்து மூன்று முறை இங்கிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இப்போது நரசிம்மராவ் அமைச்சரவையில் இடம்பெற முடியாது போனாலும் துணை ஜனாதிபதியாகிறார். இதனை எதிர்க்கட்சிகளும் ஏகமனதாக ஆதரிக்கின்றன. தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர் என்ற சலுகை இன்றியே இவர் துணை ஜனாதிபதியாகச் சகல தகுதிகளும் பெற்றவர்தான்.

ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்ட போதிலும் மாநிலங்கள் அவைக்கு வரும் பிரச்னைகளில் இதே ஒத்துழைப்பு நிலவப் போவதில்லை. எதிர்க் கட்சியினர் - ஆளும் கட்சியினரிடையே நடக்கப் போகும் சொற்போர்களை (ஒருவேளை மல்யுத்தங்களையும் கூட) மாநிலங்கள் அவைத் தலைவர் என்ற முறையில் எப்படி சமாளிக்கப் போகிறார் நாராயணன் என்று அறிய நாடே ஆவலுடன் காத்துக் கொண்டிருக்கிறது.

ஆதாரம் : ஹிந்துஸ்தான் டைம்ஸ்



# அமெரிக்கா கடிதம் :

# ஜனாதிபதியைக் காப்பாற்றிய கண்டுபிடிப்பு!

**தா**மஸ் ஆல்வா எடிஸன் 113 ஆண்டுகளுக்கு முன் டங்ஸ்டன் பல்பைக் கண்டுபிடித்து உலகையே ஒளிமயமாக்கினார். இன்று அமெரிக்க விஞ்ஞானிகள், அந்த எலக்ட்ரிக் பல்பை மைக்ரோ எலக்ட்ரானிக் பல்பாக வடிவமைத்து உலகை மேலும் ஒளிமயமாக்க உதவியிருக்கிறார்கள்

எப்படி...?

மின்சார பல்பில் டங்ஸ்டன் filament மின்சக்தியினால் எரியூட்டப்பட்டு ஒளிசிந்துவதை நாம் அறிவோம். புதிய E-Lamp என்ற எலக்ட்ரானிக் விளக்கில் டங்ஸ்டன் கம்பியே கிடையாது. அதற்குப் பதிலாக, ஒரு வாயுக் கலவையை பல்புகளில் நிரப்புகிறார்கள். மின் சக்தி செலுத்தப்படும் போது, இக் கலவை சூடாக்கப்பட்டு 'பிளாஸ்மா' நிலையை அடைகிறது. 'பிளாஸ்மா', கண்ணுக்குத் தெரியாத ஒளியலைகளைச் சிந்துகிறது. பல்பின் உள்கவரில் பூசப்பட்டுள்ள ஃபாஸ்போர் பூச்சை இந்த ஒளி அலைகள் தொடும்போது பளிச்செனக் கண்ணுக்குப் புலப்படும் ஒளியாக உருமாறி வெளிச்சம் பரப்புகின்றன.

விலை கூடுதலானாலும் (ஒரு பல்பு 15 டாலர்!) இந்தப் புதிய E-Lamp இனால் பல நன்மைகள்.

ஃபானின் வேகத்தைக் கூட்டி, குறைப்பது போல், இந்த E-Lamp இன் ஒளியளவைக் கூட்டி, குறைக்க முடியும்.

சாதாரண டங்ஸ்டன் பல்பு எரிவதற்குச் செலுத்தப்படும் மின்சாரத்தில் வெறும் ஐந்து சதவிகிதம்தான் ஒளியாக மாறுகிறது; 95 சதவிகிதம் வெப்பமாக மாறி வீணாகிறது. E-Lamp இலோ, செலவிடப்படும் மின்சாரத்தில் 75 சதவிகிதம் ஒளியாகவே உருமாறுகிறது. இதனால் ஏராளமான மின்சார விரயம் தவிர்க்கப்படும் என்பதோடு வெப்பமும் குறையும்.

மின்சாரம் குறைவாகச் செலவாவதால் மின்சார உற்பத்தியும் குறைக்கப்படலாம்; அதன் மூலம் ஏராளமான எரிபொருள் மிச்சமாக்கலாம்; எரிபொருள் குறைவாகச் செலவானால் கரியமில வாயு வெளியேற்றமும் குறைந்து, சுற்றுப்புறச் சூழல் மாசுபடுதலும் குறையும் என்று சங்கிலித் தொடராக விளைவுகளைக் கணக்குப் போட்டு வைத்திருக்கிறார்கள் அமெரிக்கர்கள்.



இந்த E-Lamp ஐ அமெரிக்கன் எலக்டிரிக் கம்பெனியின் உதவியுடன் ஆய்வு செய்து கண்டுபிடித்துள்ளது கலிபோர்னியாவில் இருக்கும் இன்டர்சோர்ஸ் டெக்னாலஜிஸ் என்ற நிறுவனம்.

'**உ**தரவிதானத்தில் ஒரு கையை வைத்து, இன்னொரு கையால் அதை மேல் நோக்கி அழுத்தினால், நுரையீரலிலிருக்கும் காற்று மேற்புறம் சென்று, காற்றுக் குழாயில் சிக்கிய உணவுத் துண்டை வெளிக் கொணரும்' என டாக்டர் ஹென்ரி ஹைம்லிக் முதன் முதலில் சொன்னபோது, டார்வின் கொள்கைக்கு ஆரம்பத்தில் ஏற்பட்ட கதியே ஏற்பட்டது. 1974 இல், அமெரிக்கன் ரெட் கிராஸ் கூட டாக்டர் ஹைம்லிக்கின் கூற்றை ஒதுக்கியது. பத்து ஆண்டுகள் போராடினார் ஹைம்லிக். இறுதியில் அவர் கண்டுபிடிப்பு சரி என்று அமெரிக்க மருத்துவ உலகம் ஏற்றது. சர்ஜன் ஜெனரல் அறிக்கை 'ஹைம்லிக் முறைதான் புரையேறல் பிரச்னைக்கு உகந்த, விரைவான தீர்வு என்று கூறிவிட்டது!

இந்த முறையில் காப்பாற்றப்பட்ட இரண்டு அமெரிக்கப் பிரபலங்கள்; ரானால்டு ரேகன், எலிசபத் டெய்லர். இன்னும் பெயர் தெரியாத ஆயிரமாயிரம் பேர்களும் இம் முறையினால் காப்பாற்றப் பட்டிருக்கிறார்கள்.

டாக்டர் ஹைம்லிக்குக்கு இதனால் ஒரு டாலர் கூட ஆதாயம் கிடையாது. வெறும் ஆத்ம திருப்திதான்.

எழுபத்திரண்டு வயது அறுவைச் சிகிச்சை நிபுணரான டாக்டர் ஹைம்லிக் தற்போது ஆபரேஷன்கள் செய்வதை நிறுத்திவிட்டார். 'ஹைம்லிக் இன்ஸ்டிடியூட்' நிறுவி ஆராய்ச்சிகள் நடத்திவருகிறார்.

மூச்சுத் திணறலால் அவதிப்படுவோருக்கு, மூக்கு வழியே அன்றி, நேரடியாக நுரையீரலுக்கு ஆக்ஸிஜன் செலுத்தத்தக்க கருவி;

நுரையீரல் மடிந்து இறக்கும் தருவாயில் துடித்த வியட்நாம் போர்வீரர்கள் பலரைக் காப்பாற்றிய 'ஹைம்லிக் வால்வு' என்ற விலை மலிவான பிளாஸ்டிக் குழாய், (இது இன்னமும் பயன்படுத்தப்படுகிறது)

உணவுக் குழாய் புற்றுநோயால் அவதிப்படுவோருக்கு வயிற்றிலிருந்தே ஒரு பகுதியை எடுத்து, மாற்று உணவுக் குழாய் செய்து பொருத்தி, மறுவாழ்வு அளிக்கும் முறை எனப் பலப்பல உயிர்காக்கும் கண்டுபிடிப்புகள் இவர் ஆராய்ச்சியினால் உதயமாயின.

தற்போது எய்ட்ஸ் நோய் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள இவர், அதுபற்றிய விவரங்களை மிகவும் ரகசியமாக வைத்திருக்கிறார். அவசரப்பட்டு வெளியிட்டால் அமெரிக்கப் பத்திரிகைகள் பரபரப்பான செய்தியாக்கிவிடும் என்பதால் இறுதியான, உறுதியான முடிவுகள் தெரியும் வரை விவரங்களைக் கூறப் போவதில்லை என்கிறார் டாக்டர் ஹைம்லிக்.

– வாஷிங்டன் ஸ்ரீதரன்



# ஒலிம்பிக்ஸ் துக்கடா!



● இருபது கி. மீ. நடை பந்தயத்தில், ஸ்பெயினைச் சேர்ந்த டேனியல் பிளாசா முதலாவதாய் வந்து, தங்கப் பதக்கம் பெற்றார். ஒலிம்பிக் வரலாற்றிலேயே ஸ்பெயின் நாட்டுக்குக் கிடைத்த முதல் தங்கப் பதக்கம் இது.



● ஒலிம்பிக் பந்தயத் துவக்க விழாவில் பாடப்பட்டப் பாடல்களின் ஒலிப்பதிவு இசைத் தட்டுகள், முதல் இரண்டு நாட்களிலேயே நான்கு லட்சம் விற்பனையாகி விட்டன.

● பல்வேறு ஆசிய நாடுகளிலிருந்தும் வந்த சுமார் 350 பத்திரிகையாளர்களுக்கு ஒரு பிரச்னை. அரிசிச் சாப்பாடு கிடைக்கவில்லை. இவர்கள் குரல் எழுப்ப, உடனடியாய் அரிசி உணவுக்கு ஏற்பாடு செய்து விட்டார்கள். ஒலிம்பிக் விளையாட்டுக் கமிட்டியினர்.



● ஐம்பத்தோரு பேர் கொண்ட இந்திய அணி, ஒலிம்பிக் போட்டியில் பங்கேற்க, பார்சிலோனாவுக்கு, திட்டமிட்டதற்கு ஒருநாள் தாமதமாய்த்தான் போய்ச் சேர்ந்தனர். காரணம், இவர்கள் சென்ற ஏர் இந்தியா விமானம், பாரிசுக்குத் தாமதமாய்ப் போய்ச் சேர்ந்ததுதான். இவர்கள் பாரிஸ் போய்ச் சேருமுன்பு, பார்சிலோனா இணைப்பு விமானம் புறப்பட்டுப் போய் விட்டது.



● லிம்பாராமிடம், டெல்லியிலிருந்து, ஒலிம்பிக்குக்குப் புறப்படுமுன் இந்திய ஹாக்கி அணி வீரர் ஒருவர், "தங்கத்தோடுதான் திரும்பி வர வேண்டும்" என்ற போது, பதிலுக்கு லிம்பா, "நீங்களும் வாங்கி வாங்க" என்றாராம். ஹூம், கடைசியில் இரண்டு பேருமே பூஜ்ஜியம்!

● ஸ்பெயின் நாட்டு ஒலிம்பிக் கழகம், தங்கப் பதக்கம் பெறும் தம் நாட்டு வீரர்களுக்கு, ஐம்பதாவது வயதில் பத்து லட்சம் டாலர் பென்ஷன் திட்டத்தை அறிவித்துள்ளது.

● "வெற்றி தோல்வி பற்றி எங்களுக்குத் துளியும் கவலையில்லை. ஒலிம்பிக்கில் 32 வருடங்களுக்குப் பின் கலந்து கொள்வதையே மாபெரும் கௌரவமாய்க் கருதுகிறோம்" இப்படிக் கூறுபவர்கள் தென்னாப்பிரிக்க வீரர்கள்.



● ஒலிம்பிக் விளையாட்டுகள் நடக்கும் போது மழை பெய்து அம்போவாகிவிடக் கூடாதே என்று 25 நன்(Nun)கள் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்கள். பிரார்த்தனைக்கு நல்ல பலன்.

● 1984 லாஸ் ஏஞ்சலஸ் ஒலிம்பிக்ஸின் சின்னமான 'சாம்' என்ற கழுகு, 1988 சியோலில் உருவான 'ஹடோரி' என்ற புலி இவற்றையெல்லாம் தூக்கிச் சாப்பிட்டு விட்டு, உலகம் முழுக்க மிகவும் பிரபலமாகி விட்டது இந்த ஒலிம்பிக் ஸின் சின்னமான 'கோபி' என்ற நாய்க்குட்டி. இது ஒரு ஆண்டிலே உருவாகியிருக்கிறது.



● ஒலிம்பிக்ஸ் போட்டிகள் ஆரம்பித்த தருணத்தில், ஸ்பெயின் முழுக்க உள்ள சர்ச்களில் மணிகள் ஒலித்தன.

● ருமேனியாவைச் சேர்ந்தவர் ஜுவான் தெலஸ்க்கு. 58 வயதான இந்த ரிடையர்டு இஞ்சினியர், ருமேனியத் தலைநகர் புகாரெஸ்ட்டிலிருந்து, பார்சிலோனா வரை 3300 கி. மீ. தூரத்தை 95 நாட்கள் நடந்தே வந்தார், ஒலிம்பிக்கைக் காண.

● பார்சிலோனாவுக்கு இந்தியாவிலிருந்து 'ஷில்பா' என்ற சின்னக் குழந்தையும் போயிருக்கிறது. அது யார் குழந்தை தெரியுமா? ஓட்டப்பந்தய வீராங்கனை ஷைனி வில்சனின் குழந்தைதான்.



● கனடாவிலிருந்து, சைக்கிள் ஓட்டப் போட்டியில் பங்கேற்று, பதக்கம் பெறும் கனவுடன் வந்த ஒரு வீரரின் கனவு வீணாகிப் போனது. ஆம்! அவர் பயிற்சி செய்து கொண்டிருக்கும் போது, ஒரு கார் மோதியதால் கால் உடைந்து, போட்டியில் பங்கேற்க முடியாமல் போய் விட்டது.

● ஹாக்கி விளையாட்டுப் போட்டிகள் நடந்த மைதானத்தில் அனைத்து ஹாக்கி அணிகளின் தேசக் கொடிகளும் பறந்து கொண்டிருந்தன, இந்திய மூவண்ணக் கொடி தவிர. இதை இந்தியப் பத்திரிகையாளர்கள் சுட்டிக் காட்டிய போது, நிர்வாகிகள் அசடு வழிந்தனர்.



தொகுப்பு : மௌலஷ்மி



# மகுடம்

"சத்யராஜ் தொழிற் சங்கத் தலைவரா...?"

"ஆமாம்..."

"காய்கறி வியாபாரிகள் சங்கத் தலைவரா....?"

"ஆமாம்..."

"பேட்டை ரவுடியா....?"

"ஆமாம்...."

"விவசாயியா....?"

"ஆமாங்க ஆமாம்!"

- இப்படி யாதுமாகி நிற்கும் சத்யராஜ், பாட்டிக்கு அடங்கிய பேரனாக வந்து, அரசியல் செல்வாக்கு, பணபலம், ஆள்பலம் உள்ள தில்லைநாதனின் எதிர்ப்பைச் சம்பாதித்து, பொய் சாராய கேஸில் உள்ளே போய்த் திரும்பி வந்து 'தாதா'வாகிறார்.

இண்டர்வெல் வேளையில் கவர்ச்சி பிருந்த பேட்டைநாயகியாய் அறிமுகம் ஆகும் பானுப்ரியா, சுடுகாட்டில் போலிப் பேயாய் அறிமுகம் ஆகும் கௌதமி இரண்டு பேருக்குமே சத்யராஜ் மேல் ஒரு கண்!

படு செயற்கையான காட்சியமைப்புக்கள், துண்டுத் துண்டாய் சம்பவங்கள், படுசாதாரண இசையமைப்பு... (அட கடவுளே! ஞானிக்கு என்னவாயிற்று?)

பாட்டி, பேரன், பானுப்ரியா மூவரும் மாறி மாறி வசனம் பேசிக் கதறியழுவது அபத்தத்தின் உச்சக்கட்டம்.

... மொத்தத்தில் டைரக்டர் பிரதாப் கே. போத்தன், தயாரிப்பாளர், சத்யராஜ் மூவரும் சேர்ந்து, தியேட்டருள் நுழைந்த விட்டில் பூச்சி ரசிகர்களுக்கு சூப்பர் குல்லா போடுகிறார்கள்.

படத்தில் பேரனும், பாட்டியும் பேசிக் கொள்ளும் வார்த்தையே படத்தை விமர்சிக்க சரியான வார்த்தை.

"சரியான லொள்ளு படம்ப்பா...."

"ஊஹூம் சூப்பர் லொள்ளு!"

- சுப்ரஜா ஸ்ரீதரன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

